**வே**ப்பேரி.

கால்நடை மருத்துவக் கல்லூரிக்கு எதிரே அமைந்த பஸ் ஸ்டாப்பில் பல்லவனின் ஏ... என் வார்க்காகக் காத்திருந்தபோது.... 'நாய்களுக்கான அழகு நிலையம்' என்று சின்னதாய் ஓர் அறிவிப்புப் பலகை என் பார்வையில் இடறுகிறது.

மனிதர்களுக்கான அழகு நிலையங்களில் 'என்னென்னவோ' நடப்பதாகச் செய்திகள் வந்திருக்கின்ற இந்த வேளையில் நாய்களுக்கான அழகு நிலையத்தில் என்னென்ன நடக்கிறது என்பதை அறியும் ஆவலில் நுழைகிறேன்.

'வள்...வள்...' வரவேற்பு செவிப்பறைகளில் மோத அழகு நிலையத்தின் ஓர் அறைக்குள் நுழைகிறேன். வழுவழுப்பான மேஜை மீது விரிக்கப்பட்டிருக்கும் 'ரப்பர் ஷீட்டில்' கண்களை மூடிப் படுத்திருக்கிறது ஒரு நாய். நீளமாக வளர்ந்திருக்கும் அதன் நகங்களை ஒழுங்காக வெட்டி, அதன் பாதங்களுக்கு அழகூட்டும் பணியில் முதல் கட்டமிது. அடுத்த கட்டமாக மெல்லிய பிரஷ் கொண்டு நக இடுக்குகளில் உள்ள அழுக்குகள் அகற்றப்பட்டவுடன் மெல்லிய துணியை நீரில் தோய்த்து நகங்கள் மீது சற்று நீர் ஒத்தடம் கொடுக்கப்பட்டுப் பின்பு வித்தியாசமான முறையில் அமைந்த கத்திரியால் அதன் நகங்கள் ஒழுங்காக வெட்டப்படுகின்றன. 'நாய்களுக்குக் கூட நகம் வெட்டப்பட வேண்டுமா?' என்று நாம் தொடுக்கும் வினாவுக்கு, 'கண்டிப்பாக வெட்ட வேண்டும்' என்று பதில் கூறும் நிர்வாகி அதற்கான காரணங்களையும் விளக்குகிறார்.



○ நகங்களை ஒழுங்காக வெட்டி...

நாய்களுக்கு - குறிப்பாக பங்களாவில் வளர்க்கப்படும் நாய்களுக்கு இவ்வாறு நகம் வெட்டுவது அவசியம். ஏனெனில் சற்று நீளத்துக்குப் பிறகு வளைந்து வளரும் நாயின் நகம், அதன் பாதங்களைக் குத்திப் புண்ணாக்கி விட்டால் நாயால் நடக்க முடியாத நிலை ஏற்பட்டுவிடுமாம். இத்தகைய நக




○ முடி வெட்ட ஒரு மணி நேரம்...



அலங்காரக் கட்டணமாக ஒரு நாய்க்கு நான்கு ரூபாய் வசூலிக்கப்படுகிறது.

அடுத்து முடி வெட்டு. மனிதர்களின் தலையில் பேன் தொல்லை இருப்பது போல் நாய்களுக்கு 'உன்னி' எனப்படும் பூச்சிகளின் தொல்லைகள் அதன் உடம்பு முழுவதும் உண்டு. வெயிலுக்காக நாம் 'சம்மர்' கிராப்' வெட்டுவது போல் கோடை காலங்களில் நாய்களின் முடி நீளத்தைக் குறைப்பது வெப்பத்தின் தாக்குதலிலிருந்து அவைகளைக் காப்பாற்றி ஆரோக்கியமாக வைக்க உதவுகிறது. 'நாய்கள்தானே' என்ற அலட்சியத்தில் தாறு மாறாக முடி வெட்டப்பட்டால் நாய்களின் உருவ அமைப்பு — அதாவது அழகு குறைந்துவிடும். எனவே நாயின் முகம் மற்றும் உடல் அமைப்புகளுக்கு ஏற்ற வாறு முடிைய வெட்டாமல் விட வேண்டிய இடத்தில் விட்டு, வெட்ட வேண்டிய இடத்தில் வெட்டுவதற்கு ஏறத்தாழ ஒரு மணி நேரம் பிடிக்குமாம். ஆனால் French Poodle என்னும் ஒருவகை உயர் இன நாய்களுக்கு முடிவெட்டும் பணி பெரும் சவாலாக அமையுமாம். ஏறத்தாழ இரண்டரை மணி நேரம் கத்தரிக்கோலோடு போராடினால்தான் இந்த நாய்களை அழகுபடுத்த இயலுமாம். ஆனால் நல்ல வேளை இத்தகைய நாய்கள் சென்னையில் மூன்றே மூன்றுதான் உள்ளதாம். நாயின் இனம், மற்றும் முடியின் அளவைப் பொறுத்துப் பதினைந்து ரூபாய் முதல் இருபது ரூபாய் வரை முடி வெட்டும் கட்டணமாக வசூலிக்கப்படுகிறது.

மனிதர்களுக்கு ''ஆயில் மஸாஜ்'' போல் நாய்களுக்கு அளிக்கப்படுவது ''ஷாம்பூ மஸாஜ்'' அல்லது 'ஷாம்பூ பாத்.' இதற்கான கட்டணம் ஐந்து ரூபாய். நாயின் உடம்பில் முடியில் ஒட்டியிருக்கும் தூசிகளையும் சிறு கிருமிகளையும் ஒழிக்கும் 'ஷாம்பூ பாத்' நாய்க்குக் கவர்ச்சியை மட்டுமின்றிப் புத்துணர்வையும் அளிக்குமாம்.

அழகு நிலையத்தை விட்டு வெளியேறும் போது நம் கண்ணில் இடறுவது ''நாய்கள் ஹாஸ்டல்.'' வெளியூர் செல்லும்போது நம் நாய்களை நாம் பாதுகாப்புடன் விட்டுச் செல்லவே இந்த விடுதி. 10 × 15 அடி அளவில் பதினெட்டு அறைகளைக் கொண்டுள்ள இந்த விடுதியில் ஒரு நாய்க்கு நாளொன்றுக்குப் பராமரிப்புக் கட்டணமாக எட்டு ரூபாய் வசூலிக்கப்படுகிறது. நாயை இங்கு கொண்டு வந்து விடு முன்பு அதற்குப் பிடித்தமான உணவு வகைகள் எது என நாய் சொந்தக்காரர்கள் கண்டிப்பாக எழுதிக் கொடுக்க வேண்டும். இந்த ஹாஸ்டலுக்கு வார்டனாக ஒரு கால்நடை மருத்துவரும், நான்கு பணியாளர்களும் பணியாற்றுகின்றனர்.

அடுத்து நம் பார்வையில் படுவது நாய்களுக்கான ஆபரேஷன் தியேட்டர். முழுவதும் ஏ.சி.யான இந்தத் தியேட்டரில் நாய்களுக்கான குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷன் இலவசமாக நடத்தப்படுகிறது.

பிராணிகள் வதை பாதுகாப்புச் சங்கத்தின் சார்பில் நடத்தப்படும் இந்த நிலையங்களில் சுவாரஸ்யமான செய்திகள் ஏதேனும் உண்டா என அறிய இதன் நிர்வாகச் செயலாளர் திரு எஸ். என். ராஜா அவர்களைச் சந்தித்தேன்....

விடுதியில் விடப்படும் நாய்களுக்குக் கட்டணமாக எட்டு ரூபாய் செலுத்துகிறோமே என்ற எண்ணத்தில் என் நாய் தினமும் 'ஜிலேபி' தான் சாப்பிடும் என்பது போல் சிலர் இதுவரை தான் அளித்திராத உயர் வகை உணவு வகைகளைக் குறிப்பிட்டுவிட அத்தகைய உணவுகளை நாய்களுக்கு அளித்தால் அவை உண்ண மறுத்துவிடும். நாய் விடுதியின் மூலம் கடந்த ஆண்டு வருவாய் 13,601 ரூபாய். அழகு நிலையத்தின் வருவாய் ரூ. 2854.

இவைமட்டுமின்றி.இனி நம்மால் வளர்க்க இயலாது எனக் கைவிடப்படும் நாய்களுக்குச் சிறந்த பாதுகாப்பாளரை — ஒரு வீட்டைத் தேர்ந்தெடுக்கும் பணியையும் செய்கிறது, எஸ்.பி. சி.ஏ.

கட்டுரை: எம். ஏ. எஸ்.
படங்கள் உதவி: எஸ்.பி.சி.ஏ.

---

## காற்றைத் தூய்மைசெய்ய மின் ஆற்றல்

**சோவியத் நாட்டு லிதுவேனியாவில் ஆலிடஸ் பஞ்சாலைப் பகுதியில், காற்று மண்டலத் துப்புரவுக்கு மின்சாரத்தைப் பயன்படுத்துகிறார்கள். பிரத்யேகமான கருவிகள் மூலம் மின் காந்தப் பிரதேசம் உண்டாக்குகிறார்கள். பஞ்சு, நூல் இவற்றின் நுண்ணிய தூசுகளை அந்தக் காந்தம் இழுத்து விடுகிறது.**

-யெல்பால்



# பெயரை ஏன் மாற்றிக்கொண்டீர்கள்?

அவ்வப்போது செய்தித் தாள்களில் ஒரு சிலர் தம் பெயரை மாற்றிக் கொண்டு விட்டதாக அறிவிக்கிறார்கள். இப்படி பெற்றோர் சூட்டிய பெயரை மாற்றிக் கொள்வானேன்? பெயர்மாற்றம் செய்து கொண்ட ஒரு சிலர் சொல்கிறார்கள்:



**'சுமிதா' ஆகிவிட்ட 'சங்கீதா'**

காரணம் நியூமராலஜி தான். எனக்குரிய நம்பர் 5. எனவே என் 5 வருமாறு சங்கீதா என்ற பெயரையே 'சுமிதா' என மாற்றிக் கொண்டு விட்டேன்.

**'மைதிலி' ஆகிவிட்ட 'மதுரம்'**

என் 'மதுரம்' என்ற பெயர் திருமணமானவுடன் என் புகுந்த வீட்டுக்கு ராசியில்லாத பெயர் என அபிப்பிராயப்பட்டதால் என் பெயரை மைதிலி என மாற்றிக் கொண்டு விட்டேன்.

**'நடேஸ் கே. மூர்த்தி' ஆகிவிட்ட என். கிருஷ்ணமூர்த்தி**

பள்ளிப் படிப்பு முடித்து, கல்கத்தாவுக்கு என். கிருஷ்ணமூர்த்தியாய்ச் சென்ற நான் அமெரிக்கத் தூதரகத்துடன் தொடர்பு ஏற்பட்டு, அங்கிருந்த லிண்டன் பி. ஜான், ஜான் எஃப். கென்னடி போன்ற பெயர்களால் கவரப்பட்டு, 'நடேஸ் கே. மூர்த்தி' ஆனேன்.

**'சிவகுமார்' ஆகிவிட்ட 'சிவராமன்'**

எம். பி. பி. எஸ். படித்த நான் சிவராமன் என்ற பெயர் கொஞ்சம் கர்நாடகமாய் இருப்பதாய் நினைத்ததால் 'சிவகுமார்' என்ற மாடர்ன் பெயராக்கிக் கொண்டு விட்டேன்.

**'விமலா கணபதி' ஆகிவிட்ட 'விமலா'**

'விமலாவாய் இருந்த நான் 'கணபதி' என்பவரை மணம் செய்து கொண்டதால் 'விமலா கணபதி' ஆகிவிட்டேன்.

**'ஆர். ஜி. ராமகிருஷ்ணா' ஆகிவிட்ட 'ஜி. ராமகிருஷ்ணன்'**

என் நியூமராலஜி நம்பிக்கையே காரணம். பழைய பெயருக்குரிய எண் 8. அது அதிர்ஷ்டமில்லாததால் 6ம் எண் வருமாறு 'ஆர். ஜி. ராமகிருஷ்ணா' என மாற்றிக் கொண்டு விட்டேன்.

**கொசுறு: பெயரை மாற்றிக் கொள்வது எப்படி?**

பெயர் மாற்றுவதற்குரிய விண்ணப்பம் கேட்டு, அரசாங்க கெஸட் அலுவலகம், வள்ளலார் நகர், சென்னை-600 001 என்ற முகவரிக்கு மனுச் செய்தால் விண்ணப்பம் அனுப்புவார்கள். விண்ணப்பத்தைப் பூர்த்தி செய்து பதினைந்து ரூபாய்க்கு, இந்தியன் போஸ்டல் ஆர்டர் இணைத்து அனுப்பினால் உங்கள் பெயர் மாற்றப்பட்டு, அரசு கெஸட்டில் வெளியிடப்படும். அந்த கெஸட் வெளியீட்டின் பிரதி உங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். அதன் பின் உங்கள் புதுப்பெயரைச் சட்டபூர்வமாய்ப் பயன்படுத்தலாம்.

(லேனாவின் 'என்ன செய்ய வேண்டும்' முதல் பாகத்திலிருந்து)

— பேட்டி: எஸ். சந்திரமௌலி

"என்ன, என் மகன் ரவி தூக்க மாத்திரை சாப்பிட்டானா? இதோ உடனே வர்றேன்!"

"மெதுவா வாங்க முதலாளி. அவன் நாம தயாரிக்கிற தூக்க மாத்திரையைத்தான் சாப்பிட்டிருக்கான்!"

-பிரகாஷ் முரளி



# நக்ஸலைட்டைத் தேடி...

நக்ஸலைட்டுகள் பற்றிய பல கேள்விகளுக்கு டி. ஐ. ஜி. தேவாரம் விரிவாகப் பதில் அளிக்கிறார்.

கேள்வி: 'நக்ஸலைட்' என்பது யார்? அவன் திருடன், கொலைகாரன் இவர்களிடமிருந்து எந்த விதத்தில் வேறு படுகிறான்?

பதில்: 'நக்ஸலைட்டு'களை ஒருவித தீவிர கம்யூனிஸ்ட்டுகள்' எனலாம். அவர்களுக்குத் தற்போதுள்ள ஆட்சிமுறை, நீதித்துறை போன்ற எதிலும் துளியும் நம்பிக்கை கிடையாது. புரட்சியினால் இவற்றை மாற்றிவிட வேண்டும் என்பது இவர்கள் எண்ணம். கொலை செய்கிறார்கள்; கொள்ளையடிப்பதுமுண்டு. கொலை, கொள்ளை போன்ற சமுதாயக் குற்றங்களைச் செய்யும்போது, அவர்களைச் சமூகக் குற்றவாளிகளாய்க் கருதிப் பிடிக்கவும், கோர்ட் மூலம் அவர்கள் செய்த குற்றங்களுக்குத் தண்டனை பெற்றுத் தரவும் போலீஸ் முயற்சி செய்கிறது.

கே: இந்த நக்ஸலைட் இயக்கம் எந்த அரசியல் கட்சிகளுடனாவது தொடர்பு கொண்டு அதன் ஆதரவில் செயல்படுகிறதா?

ப: இந்தியாவின் எந்த ஒரு அங்கீகரிக்கப்பட்ட அரசியல் கட்சிகளுடனும் இவர்களுக்குத் தொடர்பு கிடையாது. நக்ஸலைட்டுகள், தம்மைத் தனி ஒரு கட்சியாக கம்யூனிஸ்ட் (மார்க்ஸிஸ்ட்-லெனினிஸ்ட்) என்ற பெயரில் அழைத்துக் கொள்ளுகிறார்கள். எதையும் துப்பாக்கி, வெடி



✖ நக்ஸலைட்டுகளைப் பற்றி மலைவாசிகளை விசாரிக்கின்றனர்



✖ நக்ஸலைட்டைத் தேடி...

குண்டு, இவை மூலமே சாதிக்க முடியும் என நம்புகிறார்கள்.

கே: இந்தியாவில் முதன் முதலில் இந்த இயக்கம் எப்போது ஆரம்பித்தது?

ப: மே, வங்காளத்தில் 1968ல் 'நக்ஸல்பாரி' என்ற இடத்தில் ஆரம்பித்தது. அந்தத் தீவிரவாதிகள் நாட்டின் பல பகுதிகளுக்கும் சென்று ஆதரவு தேட முயன்றனர். தென்னிந்தியாவில் தமிழகத்தில் மட்டுமின்றி, ஆந்திரா, கேரளாவில்கூட நக்ஸலைட்டுகள் நடமாட்டம் வெகுவாக இருக்கிறது.

கே: தமிழகத்தைப் பொறுத்தவரை நக்ஸலைட்டுகள் பிரச்னை வட ஆற்காடு—குறிப்பாய் திருப்பத்தூர், மற்றும் தர்மபுரிப் பகுதிகளில்தானே இருக்கிறது. இது ஏன்?

ப: ஒரு சமயம் தமிழகத்தின் எல்லா மாவட்டங்களிலும் நக்ஸலைட்டுகள் பரவித்தான் இருந்தார்கள். ஆனால் வட ஆர்க்காடு, தர்மபுரிப் பகுதிகளில் மட்டும் நக்ஸலைட்டுகளுடைய அபிமானிகளை ஒன்று திரட்டிச் செயல்பட வைக்க, சில தீவிரமான தலைவர்கள் தோன்றினர். அவர்களது தலைமையால் இப்பகுதிகளில் இவ்வியக்கம் வேரூன்றி விட்டது. மற்ற மாவட்டங்களில் இவர்களுக்கு ஆதரவு கிடைக்கவில்லை. அதுமட்டுமல்லாமல், இப்பகுதிகள் மலைகளும் காடுகளும் நிறைந்தவை. நக்ஸலைட்டுகள் போலீஸ் கண்காணிப்பிலிருந்து தப்பி, தலைமறைவாகிவிடுவது சுலபம். இன்னொரு பெரிய வசதி

இப்பகுதி ஒரு Tri - Junction. போலீஸ் கெடுபிடி அதிகமானால் மிகச் சுலபமாகத் தமிழகத்திலிருந்துஆந்திராவுக்கு, அல்லது கர்நாடகாவுக்குத் தப்பிச் சென்றுவிட லாம்.

கே: நக்ஸலைட்டுகளின் செயல் முறைகள் பற்றி உங்கள் ரெக்கார்டுகள் என்ன சொல் கின்றன?

ப: தமிழகத்தில் நக்ஸலைட்டுகள் செய்த முதல் கொலை 1969ல் கோயம்புத்தூர் மாவட்டத்தில். அடுத்தது 70ல் தஞ்சை மாவட்டத்தில். ஆனால் 79 வரை அதிக அளவில் கொலைகள் இல்லை. அதன் பின் தான் அதிகரித்தன. லேவாதேவிக்காரர்கள் பெரிய நிலப் பிரபுக்கள், மற்றும் ஏழை களை ஏமாற்றிப் பணம் சேர்ப்பவர்கள் என அவர்கள் நினைப்பவர்களைத் தேர்ந் தெடுத்துக் கொலை செய்தனர். முதலில் கொலை செய்தவர்கள், பிறகு கொலை செய்யப்பட்டவரது உடைமைகளையும் கொள்ளையடித்துச் சென்றனர். 1979-80ல் திருப்பத்தூர், தர்மபுரிப் பகுதிகளில் இரண்டு வயதுக் குழந்தை யொன்று உட்பட 18 பேர் கொல்லப்பட்டனர். சுமார் 6,000 ஏக்கர் நெல் வயல், வாழை தோப்புக்கள் நாசமாக்கப் பட்டன. போலீஸ் இவர்களைப் பிடிக்கும் முயற்சி யில் இறங்கியது. தவிர, பொதுமக்களே 'நக்ஸலைட் எதிர்ப்புக் கோஷ்டி'களை உரு வாக்கி, தம்மையும், தம் உடைமை களையும் பாதுகாத்துக் கொள்ள முற் பட்டனர். இதனால் நக்ஸலைட்டுகளின் கவனம், இந்த எதிர்ப்புக் கோஷ்டிகளை ஒழிப்பதிலும் திரும்பியது. 1980ல் தர்மபுரி மாவட்டத்தைச் சேர்ந்த முக் கிய தலைவரான 'வெள்ளையக் கவுண்டர்' நக்ஸலைட்டுகளால் கொல்லப் பட்டார். அதே ஆண்டில் கதிராம்பட்டியைச் சேர்ந்த நடேச தயினரும் இதே காரணத் துக்காகக் கொலை செய்யப்பட்டார்.



✕ ஆந்திரப் பிரதேச எல்லையில் ஒரு குன்றில் நக்ஸலைட் ஒளிவிடம் போலீஸாரால் சூழப் படுகிறது



✕ ஆம்பூர் அருகே காட்டுப் பாதையில் இந்த போலீஸ் ஜீப் தாக்குதலுக்கு உள்ளாகியது. டி-ஐ-ஜி. இதில் சென்று கொண்டிருந்தார். எட்டு போலீஸ்காரர்கள் வெடி குண்டுக் காயம் அடைந்தனர்



## டி. ஐ. ஜி. தேவாரம்:

டபுள்யூ. ஐ. தேவாரம் என்ற வால்டர் ஐஸக் தேவாரம், கேரளத்தில் தேவிகுளம் பகுதியில் பிறந்து. சென்னை கிறித்துவ கல்லூரியிலும், அண்ணாமலை பல்கலைக் கழகத்திலும் படித்து, 1963ல் ஐ. பி. எஸ் - ல் இந்தியாவிலேயே முத லாவதாகத் தேறினார். அகில இந்திய போலீஸ் கல் லூரியில் 'பெஸ்ட் ஆல் ரவுண்ட் கேடட்' ஆகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, பிரதமரின் ரிவால்வர் பரிசு பெற்றார். 77ல் வெள்ளத்தில் மூழ்கிய, சென்னை கோட்டூர்புரம் பகுதியில் பலஉயிர்களைக் காப் பாற்றியதற்காக, பிரதமரின் 'சிறப்பு போலீஸ் மெடல்' பெற்றார். 80ல் 'ஜனாதிபதியின் போலீஸ் மெடல்' பெற்றார். விளையாட்டுக்களில் நிறைய ஆர்வம் உண்டு. கடந்த 13 வருடங்களாகத் துப் பாக்கி சுடுவதில் ஸ்டேட் சாம்பியன். இவருடைய தாத்தாவும், தந்தையும் ராணுவத்தில் இருந்த வர்கள். சகோதரர் விமானப் படையில். ஒரே மகள் இவருக்கு. பேட்டி நடந்த அறை முழு வதும் சுவரில் துப்பாக்கிகள், மெடல்கள்தான். டி. ஐ. ஜி.யாகத் திருச்சியில் இருந்துவிட்டு, கடந்த இரண்டாண்டுகளாக வேலூரில் இருக் கிறார்.

இதோடன்றி, நக்ஸலைட்டுகள் தம்மைப் பிடிக்க வந்த போலீஸ் அதிகாரிகளையும் தாக்கத் தொடங்கினர். பஸ்ஸில்சென்று கொண்டிருந்த இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் ஒருவரும் நக்ஸலைட்டுகளின் வெடி குண்டுக்குப் பலியானர். இதனுல் பஸ்ஸில் பயணம் செய்த இரு அப்பாவிகளும் உயிரிழந்தனர்.

பல கேஸ்களிலும் சம்பந்தப்பட்ட நக்ஸலைட்டுகளைப் பிடிக்கத் தீவிரமாக முயன்று 6–8–80 அன்று 5 நக்ஸலைட்டுகளைப் போலீஸ் பிடித்தது. அவர்களை அழைத்து வரும்போது ஒரு நக்ஸலைட், தன் உடலில் மறைத்து வைத்திருந்த வெடி குண்டை எடுத்து வண்டியின் முன் பகுதியில் வீச (அவர்கள் வண்டியின் பின் பகுதியில் இருந்தனர்) 3 நக்ஸலைட்டுகளும், ஒரு இன்ஸ்பெக்டரும், 2 கான்ஸ்டபிள்களும் இறந்தனர். குண்டு வீசிய சிவலிங்கம், மற்றும் சின்னத்தம்பி ஆகிய இரு நக்ஸலைட்டுகளும் தப்பிவிட்டனர். பல கேஸ்களிலும் சம்பந்தப்பட்டு, போலீஸால் தேடப்பட்டு வரும் சிவலிங்கம் இன்னும் பிடிபடவில்லை. இதுவரை போலீஸ் பல கேஸ்களிலும் சம்பந்தப்பட்ட சுமார் 150 நக்ஸலைட்டுகளைப் பிடித்துள்ளது. பிடிக்கும்போது நடந்த நக்ஸலைட்டுகள் தாக்குதலில், இதுவரை 3 அதிகாரிகள் இறந்து விட்டனர். சுமார் 35 பேர் காயமடைந்தனர். போலீஸ் எடுத்த பல்வேறு நடவடிக்கைகள் காரணமாகக் கடந்த ஒன்றரைவருடகாலத்தில் நக்ஸலைட்டுகள் தொந்தரவு வெகுவாய்க் குறைந்து விட்டது.

கே: நக்ஸலைட்டுகள் பலவிதமான ஆயுதங்களைப்பயன்படுத்துகின்றனரே! இவையெல்லாம் அவர்களுக்கு எப்படிக் கிடைக்கிறது?

ப: சாதாரணமாய், கத்தி, கொடுவாள் போன்றவை யாருக்குமே எளிதில் கிடைக்கும். நாட்டுத் துப்பாக்கிகள் நிறைய வைத்திருக்கிறார்கள். வீடுகளில் கொள்ளையடிக்கும்போது ஆயுதங்களைக் கைப்பற்றிக் கொண்டுபோய் விடுகிறார்கள். சிலமாதங்களுக்கு முன்பு ஒரு நக்ஸலைட் கும்பலைப்



**இடுக்கண் வருங்கால்...!**

திடீரென்று பிரேக் கெட்டுப்போய்விட்டது. பெண்கள் அழ ஆரம்பித்து விட்டார்கள். சரிவில் ஏறிக்கொண்டிருந்தபஸ் வேகமாய்ப் பின்னோக்கி ஓட ஆரம்பித்தது. உடனே டிரைவர் கண்டக்டரிடம் சொன்னார்: "சீக்கிரம் முன்னாலும் பின்னாலும் உள்ள போர்டுகளை மாற்றிவை!"

- எஸ். சுந்தரராஜன்

பிடித்தபோது 5 துப்பாக்கிகளைக் கைப்பற்றினோம். அதில் வெளி நாட்டுப் பிஸ்டலும் ஒன்று இருந்தது. மற்ற மாநில நக்ஸலைட்டுகளிடமிருந்தும் ஆயுதங்களைப் பெறுகிறார்கள். மிக அபாயமான வெடிகுண்டுகளைத் தயாரிக்கும்முறை இவர்களுக்குத் தெரிந்துள்ளது. கடந்த சில ஆண்டுகளில் வெடிகுண்டு தயாரிப்பில் டெக்னிக்கலாக மிகவும் முன்னேறியுள்ளனர். சில சமயம், தயாரிக்கும்போதே வெடிகுண்டுகளுக்குச் சில நக்ஸலைட்டுகள் பலியாகிவிடுவதுமுண்டு.

கே: நக்ஸலைட்டுகள் எங்கே வாழ்வார்கள்?

ப: பொதுவாக மக்களுடன் இருந்து கொண்டே தம் செயல்களில் ஈடுபடுவார்கள். 'நக்ஸலைட்' எனத் தன்னைப் போலீஸ் சந்தேகிப்பது தெரிந்ததும் தலைமறைவாகிவிடுகின்றனர். நக்ஸலைட்டுகளிடையே பக்காவான 'கம்யூனிகேஷன் முறை' உண்டு. அதனுல் எந்த ஒரு நக்ஸலைட்டும் இன்னொரு நக்ஸலைட்டுடன் தொடர்பு கொள்வது எளிது.

கே: நக்ஸலைட்டுகள் உருவாக "முக்கிய காரணம் என்னவென நினைக்கிறீர்கள்?

ப: நக்ஸலைட்டுகள் 18–30 வயது வரம்புக்கு உட்பட்டவர்கள், பள்ளி, கல்லூரிப் படிப்பைப் பாதியில் விட்டவர்கள், படித்துவிட்டு வேலையில்லாதவர்கள், நிரந்தர வேலையில்லாதவர்களாக இருக்கின்றனர். Generally They are misguided Youth. மேலும் கொள்ளை, திருட்டு போன்ற குற்றங்களில் தண்டனை பெற்றவர்கள்பலரும் இந்த இயக்கத்தில், தம் நன்மைக்காகச் சேர்ந்திருக்கிறார்கள். நக்ஸலைட் என்ற போர்வையில் செயல்பட்டு வருகிறார்கள்.

கே: நக்ஸலைட் இயக்கத்துடன் ஒரு இளைஞனுக்குத் தொடர்பு ஏற்பட்டால், அவன் கொலையும்,கொள்ளையும்நடத்திக்கொண்டு தலைமறைவாய் வாழ்ந்து, கடைசியில் பிடிபட்டுத் misguided தண்டனை பெற வேண்டியதுதானு?

ப: தற்போதுள்ள சட்டங்களின்படி, போலீஸ் நக்ஸலைட்டைப்பிடித்து, கோர்ட்

டில் நிறுத்தலாம். ஆனால் அவர்கள் ஜாமீனில் வெளிவந்து மீண்டும் தலைமறைவாகி விடுவார்கள். இத்தகைய நக்ஸலைட்டுகள் மீண்டும் பல குற்றம் புரிகிறார்கள். சாட்சிகளை மிரட்டுகிறார்கள். சரணடையும்படி நாங்கள் வேண்டுகோள் விடுக்கும் போது, தம் செயல்களுக்கு வருந்தி, மனம் திருந்திச் சரணடைபவர்களும் இருக்கிறார்கள். நாங்கள் நக்ஸலைட்டுகளைப் பிடிப்பது எவ்வளவு முக்கியமோ அப்படியே திருந்திய நக்ஸலைட்டுகளுக்கு மறுவாழ்வளிப்பதும் முக்கியமென நினைக்கிறோம். அதற்கு எங்களாலானதைச் செய்கிறோம். போலீஸ் கேஸ்களில் சம்பந்தப்படாத, திருந்திய நக்ஸலைட் அபிமானிகளை தகுதி உள்ளவரானால் போலீஸிலேயே சேர்த்துக் கொள்கிறோம். (இங்கே ஒரு பெரிய ஃபைலிலிருந்து ஒரு லெட்டரைக் காட்டுகிறார். அது தற்போது கான்ஸ்டபிள் பயிற்சி பெற்று வரும் முன்னாள் நக்ஸலைட்டுகள் இருவர் எழுதியது: அவர்களது, 'ஐயா! நாங்கள் செய்தோமே அதுவல்ல புரட்சி; நீங்கள் செய்தீர்களே—செய்கிறீர்களே இதுதான் உண்மையான புரட்சி' என்ற வரி என்னைக் கவர்ந்தது.) இதுபோல இன்னும் நிறையக் கடிதங்கள் இருக்கின்றன. தனியார் துறை நிறுவனங்களில் வேலை வாங்கிக் கொடுத்துள்ளோம். சுயமாய்த் தொழில் செய்ய பாங்கில் கடனுதவிக்கு ஏற்பாடு செய்து கொடுத்துள்ளோம். இந்த விஷயத்தில் தர்மபுரி கலெக்டர் திரு சீனிவாசன், எஸ். பி. திரு விஜயகுமார் ஆகியோரது பணி முக்கியமானது. ஆனால் திருந்தாமல், சமூக விரோதச் செயல்களில் ஈடுபடும் நக்ஸலைட்டுகள் என்றாவது போலீஸில் பிடிபட்டு, தண்டனை பெறுவதைத்தவிர வேறு வழி இல்லை.

கே: புதிய நக்ஸலைட்டுகள் உருவாகாதிருக்க என்ன முயற்சிகள் செய்கிறீர்கள்?

ப: கிராம மக்களைவிட மலை ஜாதியினர் மிக எளிதில் நக்ஸலைட்டுகள் வலைக்குள் விழுந்து விடுவார்கள். எனவே மலை ஜாதியினரை, அரசாங்கத்துடன் நெருக்கமாய்க் கொண்டுவரும் முயற்சியில் ஈடுபட்டுள்ளோம். சம்பந்தப்பட்ட அதிகாரிகளுடன் இது விஷயமாய், வட ஆர்க்காடு, சேலம், தர்மபுரி மாவட்டங்களில் உள்ள எல்லா மலைப் பகுதிகளுக்கும் நான் சென்றிருக்கிறேன். அவர்கள் தேவைகளைச் சம்பந்தப்பட்ட இலாகாக்களில் எடுத்துச் சொல்லித் தீர்வு கண்டு வருகிறோம். அவர்கள் 'நக்ஸலைட்டுகளுடன் எந்தவிதத்திலும் தொடர்பு கொள்ள மாட்டோம்' என உறுதியளித்துள்ளனர். இந்தியாவிலேயே முதன் முறையாகக் கடந்த ஜனவரியில் ஐவ்வாது மலையில் போலீஸ்—மலைஜாதியினர் விளையாட்டுப் போட்டிகளை நடத்தினோம். இது மாபெரும் வெற்றி. தகுதியுள்ள மலைஜாதி இளைஞர்களைப் போலீஸில் சேர்த்துக் கொண்டுள்ளோம்.

நான் ஒரு தாய்!
'குட்டி'
போட்டாலும்
பால்
கொடுக்காதவள்
நான்!
பசும்பால்
புட்டிப்பால்
ஆட்டுப்பால்
தண்ணீர்ப்பால்...
எப்பாலும்
பருகாமல்
பார்ப்போர்
மலைக்க
மளமளவென்று
வளர்வான்
என்
சிங்கக்
'குட்டி'.
நான்—
வட்டி!



- எல். பாலகிருஷ்ணன்

கே: அப்பாவி மக்களும், அரிஜனங்களும் நக்ஸலைட் என்ற முத்திரை குத்தப்பட்டுத் துன்புறுத்தப்படுகிறார்கள் என்ற குற்றச்சாட்டுக்கு உங்கள் பதில் என்ன?

ப: இதே குற்றத்தைச் சாட்டித்தான் பி.யூ.ஸி.எல். சுப்ரீம் கோர்ட்டில் ஒரு கமிஷன் அமைக்கக் கோரி, வழக்குத் தொடர்ந்துள்ளது. இந்தக் குற்றச்சாட்டு அர்த்தமில்லாதது. போலீஸுக்கு யாரையும் வீணாகத் துன்புறுத்தவோ, சுட்டுக் கொல்லவோ ஆசை கிடையாது. கைது செய்யப்பட்ட நக்ஸலைட்டுகளில், அரிஜனங்களை விட ஜாதி இந்துக்களே அதிகம். நக்ஸலைட்டுகளைப் பிடிக்கச் செல்லும் போலீஸிலும் ஹரிஜனங்கள் இருக்கிறார்கள். நக்ஸலைட்டு எனப் பிடிக்கப்பட்டவர்கள் பலவேறு கேஸ்களுடன் சம்பந்தப்பட்டு, போலீஸால் தேடப்பட்டவர்கள். அவர்களுக்கு எதிராக 'வாரண்ட்'டுகள் கோர்ட் மூலம் வழங்கப்பட்டுள்ளன. இதை போலீஸ் ரெக்கார்டுகள் மூலம் நிரூபிக்க முடியும். எனவே உங்கள் குற்றச்சாட்டு ஆதாரமில்லாதது.

-பேட்டி: எஸ். சந்திரமௌலி


கொள்ளையர்களை இரு மாதங்களில் தீர்த்துக் கட்டிவிடுவேன்!
உ.பி. முதல்வர் வி.பி.சிங்


ராஜினாமா
உ.பி. முதல்வர் வி.பி.சிங்


ரயில் கட்டணம் மீண்டும் உயர்கிறது!


வாடி வதங்கிக் கருகும் இந்த மழலைச் செல்வத்துக்குச் சத்துணவு தயாரித்து, ஊட்டி, ஊட்டம் பெறச் செய்து ஒவ்வொரு விநாடியும் வியர்வை சிந்த உழைக்கும் இந்த அமைச்சர்களைக் கொண்ட அரசைச் செயலற்றது என்று சொன்னால், இந்த ஆகாசப் புளுகின் சொந்தக்காரர்களைத் தமிழக மக்கள், தாய்க்குலம், கவனிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளும் போது இந்தச் சத்துணவு திட்டம் ஒழுங்காக நடக்கிறதா என்று உன்னிப்பாக.. விழிப்புடனிருந்து...

# வீடியோ பக்தர்கள்!

பதினேழு அ.இ.அ.தி.மு.க. எம்.எல்.ஏ.க்களும் இரண்டு இ. காங்கிரஸ் எம். எல். ஏ.க்களும் அடங்கிய குழு ஹாங்காங் சிங்கப்பூருக்குத் திக்விஜயம் சென்று மாபெரும் வெற்றியுடன் திரும்பியுள்ளது.

அந்த வெற்றியின் அடையாளச் சின்னங்களாக அவர்கள் இல்லங்களில் இன்று அயல்நாட்டுப் பொருள்களாக அடுக்கி வைக்கப்பட்டுள்ளன.

டிரான்ஸிஸ்டர், டேப் ரிகார்டர், ரிஸ்ட் வாட்ச், டு இன் ஒன், வாக்கி டாக்கி, கால்குலேட்டர்... சே! இதெல்லாம் என்ன பிரமாதம்? வீடியோ! வீடியோ இல்லாத வீடும் ஒரு வீடா! எம்.எல்.ஏ. தகுதிக்குக் குறைந்தபட்சம் ஒரு வீடியோ வேண்டாமா?

காமன்வெல்த் நாடாளு மன்றச் சங்கமும் தமிழக அரசும் 19 எம். எல். ஏ.க்களைத் தேர்ந்தெடுத்து இந்தச் சுற்றுப் பயணத்துக்கு அனுப்பியது. இப்படி மக்களின் வரிப் பணத்தை ஏராளமாய்ச் செலவிட்டு இவர்களை அயல்நாடு அனுப்ப ஏதாவது உயர்ந்த நோக்கம் எழுத்தளவிலாவது இருந்திருக்கத்தான் வேண்டும். அந்த நோக்கம் எதுவாயினும் திரும்பி வரும்போது இவர்கள் நோக்கம் ஒன்றே. தினுசு தினுசாக அயல் நாட்டுப் பொருள்களை வாங்கிக் குவித்து மூட்டை கட்டிக் கொண்டுவந்துவிட வேண்டும்!

'கஸ்டம்ஸ் ஒரு கஷ்டம்ஸ்' என்று எண்ணுவோம் நாம். ஆனால் எம். எல். ஏ.க்கள் இதற்கெல்லாம் அஞ்சுகிறவர்களில்லை. ''கட்டு டியூட்டி!'' என்றனர் கஸ்டம்ஸ் அதிகாரிகள். ''கட்டினோம்!'' என்றனர் எம். எல். ஏ.க்கள். ஒன்றல்ல இரண்டல்ல, ஆறு லட்சம் ரூபாய் அலுங்காமல் கட்டினார்கள்!

பார்க்கப் போனால் இவர்கள் எவ்வளவோ தேவலாம்! இதற்கு முன் இதேபோல் ஒரு எம்.எல்.ஏ. குழு சென்றதாம். அவர்கள் திரும்பி வரும்போது நண்பர்களும் உறவினர்களுமாய் ஒரு பெருங் கூட்டம் அவர்களை வரவேற்க வந்து, கஸ்டம்ஸ் தடைகளை மீறி உள்ளே சென்று, சோதனைகள் முடிவதற்கு முன்பே பெட்டிகளையும் எல். எல். ஏ.க்களையும் தூக்கிக் கொண்டு போய்விட்டதாம்! அதனால் இம்முறை கஸ்டம்ஸ் அதிகாரிகள் விழித்துக் கொண்டு பலத்த போலீஸ் பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்திருந்தனர்!

எம். எல். ஏ.க்களும் 'ஹூம், உன்னால் இவ்வளவுதான் டியூட்டி போட முடியுமா?' என்பது போல் அலட்சியமாய்த் தந்தார்கள். சிலரிடமிருந்து உடனுக்குடன் 30,000 அல்லது 40,000 ரூபாய் பிரிந்தது. வேறு சிலர் அன்று மாலைக்குள் பணத்தைக் கொண்டு வந்து கொடுத்துப் பொருள்களை மீட்டுச் சென்றனர்.

'சுங்கம் கட்ட இத்தனை பணம் இவர்களுக்கு ஏது?' என்று யோசிப்பவர்கள் அப்பாவிகள். 'அயல் நாட்டில் இத்தனை பொருள்களை வாங்க இவர்களுக்கு ஏது அந்நியச் செலாவணி?' என்று சிந்திப்பவர்கள் அசடர்கள். நமது எம். எல். ஏ.க்களோ கெட்டிக்காரர்கள்! அவர்களுக்குப் பணம் ஒரு பெரிய விஷயமே இல்லை! எளிதில் சம்பாதிப்பார்கள்.

முன்னொரு காலத்தில் நமது எம். எல். ஏ.க்களைத் தேச பக்தர்கள் என்றோம். இன்று அவர்கள் வீடியோ பக்தர்களாகத் திகழ்கிறார்கள்.

வாழ்க, நம் பிரதிநிதிகள்! வளர்க, அவர்கள் சுயநலத் தொண்டு! வெல்க, அவர்களுடைய மனச்சாட்சிக் கலப்பில்லாத வோட்டு!




1982 ஜூலை 11
துந்துபி ஆனி 27
மலர்: 40 இதழ்: 50

கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்.




# மனச்சாட்சியை மூட்டை கட்டுங்கள்!

கி. ராஜேந்திரன்

"ஜனாதிபதி தேர்தலில் மனச்சாட்சிப்படி வோட்டளியுங்கள்'' என்று நாடாளு மன்ற, சட்ட மன்ற உறுப்பினர்களைப் பார்த்து எதிர்க்கட்சித் தலைவர்கள் கேட்டுக் கொண்டது எவ்வளவு முட்டாள்தனமானது என்பதை பிரதமர் இதற்குப் பதிலடி கொடுத்தவுடன் தான் என்னால் தெளிவாகப் புரிந்து கொள்ள முடிந்தது.

''மனச்சாட்சிப்படி வோட்டுப் போடுங்கள் என்று சொல்வது ஜனநாயகத்தையே அவமானப்படுத்துவதாகும்'' என்று பிரதமர் ஒரே வரியில் மிகப் பெரிய தத்துவத்தை வெகு அழகாகக் கூறிவிட்டார்!

ஓர் உதாரணம் தேவையானால் உ. பி. முதல்வர் வி. பி. சிங்கின் ராஜினாமாவையே எடுத்துக் கொள்ளுங்கள். அவர் பாட்டுக்கு மனச் சாட்சியைக் காரணம் காட்டி ராஜினாமா செய்து விட்டார். இதனால் கொள்ளைக்காரர்கள் பிடிபட்டு விடுவார்களா? அவர்களால் விளையும் துன்பம் தீர்ந்து விடுமா? இதில் அடுத்து வரும் இந்திரா காங்கிரஸ் முதல்வர் வெற்றி பெற்று விடுவாரா? ஒன்றுமில்லை! மாறாக வி. ப். சிங் ராஜினாமாவால் புதிய பிரச்னைகள்தான் தோன்றியுள்ளன. இந்திரா காந்திக்கு அடுத்த முதல்வரைத் தேர்ந்தெடுக்க வேண்டிய தொல்லை. இதனால் ஏற்படப்போகும் உட் கட்சிப் பூசல்களைச் சமாளிக்க வேண்டிய தலைவலி. 'முதல்வரை நீங்களே தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்' என்று அவரால் அனுமதிக்கவும் முடியாது. அப்படி அனுமதித்தாலும் மறுபடி அங்கே மனச்சாட்சி வோட்டுப்பிரச்னை தலைதூக்கும். எனவே அவரே நியமித்துத்தான் ஆக வேண்டும். அவர் ஜனாதிபதி தேர்தலைக் கவனிப்பாரா? அல்லதுமுதல்வர் நியமனத்தைப்பற்றி யோசிப்பாரா? ஆக, வி.பி. சிங் மனச் சாட்சியை மூட்டை கட்டி வைக்காததால் ஜனநாயகத்துக்கு எவ்வளவு புதுப் புது சோதனைகள் பாருங்கள்! இப்படி மனச்சாட்சியானது ஜனநாயகத்தைச் சோதித்து அவமானப்படுத்த அனுமதிக்கலாமா?

இதற்கு முன் லால் பகதூர் டி. டி. கே. போன்றோர் மனச் சாட்சி உந்துதலால் ராஜினாமா செய்யவில்லையா? என்று கேட்கலாம். செய்தார்கள், செய்து என்ன சாதித்தார்கள்? அரியலூருக்குப் பிறகு ரயில் விபத்துக்கள் அதிகரித்துள்ளதே தவிரக் குறையவில்லையே? முந்திரா விவகாரத்துக்குப் பிறகு பொருளாதார முறைகேடுகள் பெருகியுள்ளனவே தவிர இறங்குமுகமாயில்லையே? ஆக எதற்காக மனச்சாட்சிப்படி ராஜினாமாச் செய்வதாம்?







நடந்து முடிந்த கதைகளை விடுங்கள். நிகழ்கால யதார்த்தத்துக்கு வருவோம். மனச்சாட்சிப்படி வீரமணியும் அவர் கழகத் தோழர்களும் நடந்து கொள்ள ஆரம்பித்தால் என்ன ஆகும்? பிராமணர்கள் என்று பெயரளவில்தான் பெரும்பாலானோர் இருக்கிறார்களே ஒழிய பார்ப்பனீயம் என்பதாக அவர்கள் எதையும் கட்டிக் காக்கவில்லை. அவர்கள் Main stream எனப்படும் மக்கள் சமுதாயக் கூட்டத்தோடு இரண்டறக் கலந்துவிடவே முயல்கிறார்கள்; விரும்புகிறார்கள் என்பதைப் புரிந்துகொண்டு விடுவார்கள். அப்புறம் துவேஷம் போய் விடும். அன்பு தழைக்கும்! வசைமாரி இராது. சுவர்கள் ஆபாசம் நீங்கிச் சுத்தமடையும்! வேத சாஸ்திரங்கள் அடியோடு அழிந்து படாமல் எதிர்காலத்தில் அவற்றை (பார்ப்பனீயத்தை)க் கட்டிக் காக்க வேண்டிய பொறுப்பு அரசாங்கத்துக்கே ஏற்பட்டுப் போகும் என்பதைக்கூட உணர்ந்து விடுவார்கள்! இதற்கு மறுபுறமாக, இன்னமும் சில அநியான பழக்க வழக்கங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கும் சில பிராமணர்களும் மனச்சாட்சி உந்துதலால் மனம் மாறி விடுவார்கள். அப்புறம் எனக்குக் கிண்டல் கட்டுரை எழுதவோ விடுதலை அதற்கு மேலும் வெறுப்பை உமிழ்ந்து பதில் கூறவோ வாய்ப்பே இராது. வாழ்க்கையே உப்புச் சப்பின்றிப் போகும்!

மனச்சாட்சிப்படி எல்லோரும் காரியம் பண்ணத் தொடங்கி விட்டால் அதைவிட ஜனநாயகத்துக்குப் பேராபத்து எதுவுமே இல்லை. ரயில்கள் நேரத்துக்கு ஓடுகின்றன; விபத்துக்கள் நடக்கவில்லை; மார்க் 'லிஸ்ட் ஊழல் கிடையாது; சென்ஸார் போர்டு—திரையுலக வாக்குவாதம் நஹி; டாக்ஸி, ஆட்டோக்காரர்கள் மீட்டருக்கு மேல் கேட்கவில்லை; அரசு ஊழியர்கள் குறித்த நேரத்தில் பணிகளை முடிக்கிறார்கள்; ஓவர்டைம் இல்லை; அபரிமித வரிகள் கிடையாது. பர்மிட், லைசென்ஸ் என்ற பேச்சே இல்லை; எனவே லஞ்ச ஊழல் இல்லை; சிமெண்ட் ஊழலா? அண்டுலே டிரஸ்ட்டா? அப்படியென்றால்...? கட்சிக்குப் பணம் சேர்ப்பதற்காக சுவனீர், அதில் பக்கத்துக்குப் பத்தாயிரம் என்று விளம்பர விகிதம், பொதுத் தேர்தலில் வோட்டுக்களை விலைக்கு வாங்குதல் போன்ற தில்லு முல்லுகள் ஏதும் இல்லை என்றால் பத்திரிகைகள் என்ன செய்தியை வெளியிட முடியும்? ஆசிரியருக்குக் கடிதங்கள் பகுதியில் மக்கள் என்ன குறைகளை முறையிட்டுக் கொள்வது? பஸ்ஸிலும் ரயிலிலும் பீச்சிலும் பார்க்கிலும் காண்டீனிலும் அரட்டை அடிக்க ஏது விஷயம்? அரசியல் வாதிகள் மேடை ஏறி எதைப் பற்றிச் சொற்பொழிவு ஆற்றுவது? பார்க்கப் போனால் எதிர்க் கட்சிகளுக்கே அவசியமிராது. இடமுமிராதே! எதிர்க் கட்சி இல்லாவிடில் ஜனநாயகம் ஏது? இத்தகைய பரிதாப நிலை நமது எதிர்க் கட்சிகளுக்கும், பேராபத்து நமது ஜனநாயகத்துக்கும் ஏற்படுவதைப் பிரதமர் பார்த்துக் கொண்டு சும்மா இருப்பாரா? அதனால்தான் முளையிலேயே கிள்ளிவிட வேண்டும் என்று கருதி மனச்சாட்சி வோட்டை எதிர்க்கிறார்.

அப்படியானால் கிரி ஜனாதிபதி தேர்தலுக்கு நின்றபோது மட்டும் இந்திரா காந்தியே ''மனச்சாட்சிப்படி வோட்டுப் போடுங்கள்'' என்று சொன்னாரே என்று சிலர் தெரியாத்தனமாகக் கேட்கலாம். 'மனச் சாட்சி வோட்டு' என்று இந்திரா கூறுவதற்கும் எதிர்க் கட்சியினர் சொல்வதற்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் உண்டு. இந்திரா காந்தி 'மனச்சாட்சி வோட்டு' என்றால் 'இந்திரா காந்தியின் மனச்சாட்சிப்படி வோட்டு' என்று அர்த்தம். எதிர்க் கட்சியினர் சொன்னால், 'ஒவ்வொரு தனி நபரும் தத்தமது மனச்சாட்சிப்படி வோட்டுப் போடுதல்' என்று அர்த்தம்!

'ஆகக் கூடி இந்திராவின் மனச்சாட்சி என்பதாகவேனும் ஒன்று இருப்பதாக நீங்கள் ஒப்புக்கொள்கிறீர்களா அல்லவா?' என்று சிலர் விதண்டாவாதம் பண்ணலாம்.

மனச்சாட்சி வோட்டை எதிர்ப்பவர் தம்மிடம் மட்டும் மனச் சாட்சியை ஒளித்து வைத்துக் கொண்டிருப்பாரா என்ன? அலகாபாத் நீதி மன்றத்தில் அது கொஞ்சம் வம்பு பண்ண ஆரம்பித்தபோது அதைக் கழுத்தைப் பிடித்துவெளியேதள்ளினார் பாருங்கள், அது தப்பினோம் பிழைத்தோம் என்று ஓடியே போய்விட்டது! இப்போது இந்திரா காந்தி மட்டுமேதான் மனச்சாட்சிக் கலப்பின்றித் தூய்மையே வடிவமாக நிற்கிறார்.



**மா**ரப்பன் மறுபடியும் இரண்டு ஆட்களுடன் அன்று மாலை சந்தியாவைக் காண வந்திருப்பதைப் பார்த்த அத்தை மிகவும் மிரண்டு போய்விட்டாள். இப்பொழுதுதான் பழுது பார்க்கும் வேலை ஒரு வழியாக முடிந்தது. பாங்கியிலிருந்த அத்தனை பணமும் அதற்குச் செலவாகிப் போனது. மறுபடியும் இந்தப் பெண் என்ன ஆரம்பிக்கப் போகிறாள்? அத்தைக்கு ஒரே குழப்பம்.

அப்பொழுதுதான் சந்தியா வேலையிலிருந்து திரும்பி வந்திருந்தாள். தோள் பையையும் கையில் சுமந்து கொண்டு வந்த அடுக்குப் புத்தகங்களையும் கூடத்து மேஜை மீது போட்டுவிட்டுத் தாகத்திற்குப் பச்சைத் தண்ணீர் கூடச் சாப்பிடாது முன் பக்கத்து தோட்டத்துக்குள் போய் அவர்களுடன் உரத்த குரலில் தர்க்கிக்கத் தொடங்கினாள்.

அவர்கள் போன பின்பு கேட்டை மூடிக் கொண்டு உள்ளே வந்தவள் முகத்தில் கவலை கப்பிக் கொண்டிருந்ததை அத்தை கவனித்தாள். காப்பியைக் கலந்து கொண்டு வந்து வைத்த அத்தை மெல்லிய குரலில் கேட்டாள்:

''மறுபடியும் ஆட்களை எதுக்கு வரச் சொன்னியாம்?''

''கன்றுக்குட்டியை நாம் எத்தனை நாள் ராத்திரி வேளையில் தாழ்வாரத்தில் கட்டி வைக்க முடியும்? மழைக் காலத்திலே சாணியும் வைக்கோலுமாக வீடு அசிங்கமாகி விடும். தினமும் இடத்தைச் சுத்தப்படுத்தர வேலை ஒண்ணு உங்களுக்கு அதிகப்படியாகி விடும். அதுக்காக மாட்டுக் கொட்டகை இருந்த இடத்தில் கொஞ்சம் செங்கல்லைப் பரவி ஒரு சின்னச் சுற்றுச் சுவர் எழுப்பிகீத்துக் கொட்டகை போட்டுத் தட்டி வைச்சு மறைக்க ஏற்பாடு செய்து கொண்டிருக்கேன். இடிஞ்ச சுவரிலிருந்த கற்களை உப

# சாதாரண மனிதன்

## 'லக்ஷ்மி'





யோசித்துத்தான் சுற்றுச் சுவர் இரண்டடி உயரத்துக்கு எழுப்பப் போறாங்க....''

''இதுக்கெல்லாம் பணம் பிடிக்குமே- அதுக்கு என்ன பண்ணப் போறே?''

இடிஞ்ச ''போல கொட்டகையிலிருக்கும் ரீப்பர்கள், ஓடுகள் முதலியவற்றை ஒட்டு மொத்தமாக ஒரு விலை போட்டு அந்த ஆட்களே எடுத்துக்கப் போறாங்க. மேலே ஒரு ஆயிரம் ரூபாய் தந்தால் போதும். நல்லதொரு கொட்டகை போட்டுத்தர முடியும் என்றார்கள். சரின்னு பேசி முடிச்சுட்டேன்.''

''ஆயிரம் ரூபாய்! அதுகூட இப்போ நம் கையில் ரொக்கமாக இல்லையே.''

''ஏன் அத்தை பொய் சொல்றீங்க? உங்க தங்க மோதிரங்களையும் கழற்றிக் கொடுங்கன்னு கேட்கப் போறேன். எனக்கு மாட்டேன்னு சொல்லுவீங்க?''

''சந்தியா! இந்த மோதிரங்களைச் சில நாளுக்கு முன் எடை போட்டுப் பார்த்தேன். ஒரு பவுனுக்கு மேலே இரண்டு குந்துமணி தான் தேறும்னு கடைக்காரர் சொல்லிட்டார். ஒண்ணை வித்து ஒரு கொத்து ஹைதராபாத் முத்து வாங்கவும் இன்னொண்ணை வச்சு தங்கக் கம்பி இழுத்து முத்து மாலை கட்டணும்னும் ரொம்ப நாளா யோசனை.''

''முத்து மாலை போட்டுக்கணும்னு உங்களுக்கு இப்ப ஆசை வந்திட்டதாகும்.''

''போக்கிரிப் பெண்ணே! உனக்கு வாய் ரொம்ப அதிகம்னு சொல்றது சரிதான். எனக்கு இந்த வயசில் முத்துமாலை எதுக்கு? உனக்குச் செய்து போட்டுப் பார்க்க ஆசைப் படறேன்.''

''முத்துப் போல் கடவுள் பல்லைக் கொடுத்திருக்கார்னு என்னை அடிக்கடி புகழ்வீங்களே அது போதும். என் புன்னகை எனக்குப் பெரிய பொன்னகை. எது முக்கியம் எது முக்கியமல்ல என்று தராதரம் இல்லையா அத்தை. இப்போ நமக்கு வேண்டியது அந்தப் பசுங் கன்னுக் குட்டியைக் கட்டி வைக்க ஒரு கொட்டில்.''

''இதற்குப் பிறகு என்ன செய்வதாக யோசனையோ?'' — கேட்டபடி அத்தை அழ மாட்டாத குறையுடன் தன் விரல்களில் தேய்ந்து பிடித்துக் கொண்டிருந்த அந்த இரு மோதிரங்களையும் கழற்றி மேஜை மேல் வைத்தாள்.

''அடுத்த படியாக என் கை வளையல்கள் இரண்டையும் விற்று வீட்டுக்கு வர்ணம் பூசப்போகிறேன்!''

ஜகதா திடுக்கிட்டுப்போனாள்.

''சந்தியா உனக்கென்ன பைத்தியமா பிடிச்சிருக்கு? உன் மேலிருக்கும் நகை, பாங்கியிலிருக்கும் பணம் எல்லாத்தையும் இப்படியே இதுமேலே போட்டால் பிறகு?''

''அத்தை.. வீட்டைச் சீர் திருத்தி வச்சபிறகு அடுத்த

படியாக நான் என்ன செய்ய உத்தேசித்திருக்கிறேன் என்பதை அப்புறம் சொல்கிறேன். நம்மாலும் இவைகளைச் சமாளிக்க முடியும் என்பதை என் அத்தான்களுக்கு நிரூபிக்கக் காட்ட வேண்டாமா?''

அன்று இரவு ஜகதாவுக்கு உறக்கம் வரவில்லை. சில நாட்களாக அவளுக்கு உடல் அயர்ச்சி அதிகமாகிக் கொண்டு வருவதை உணர்ந்தாள். இந்நிலையில் அவள் எத்தனை காலம் வாழ்ந்து கொண்டு சந்தியாவுக்கு ஆதரவாக, துணையாக இருக்கப் போகிறாள்? அவளுக்குத் திடீரென்று ஏதாவது ஏற்பட்டு விட்டால்சந்தியாதன்னந் தனியாக...அந்தப் பெரிய தோட்டம் சூழ்ந்த வீட்டில் எப்படி வசிக்க முடியும்? எத்தனை காலம் கல்யாணமில்லாத தனிக் கட்டையாக இருப்பாள்... 'காலா காலத்தில் செய்யாது அப்பன் போய்விட்டான். அத்தையம்மாளாலும் ஏதும் முடியவில்லை. அவளும் போய்விட்டாள். இரண்டு அத்தான்களும் அசட்டையாக இருக்கிறார்கள். — வாத்தியார் மகள் சந்தியா தனிமரமாக நிற்கிறாள்' என்று ஊர் நன்றாக வம்பு பேசுமே? கிரிதரன் அவர்களிடம் பேசிய விதத்தையும் நெருங்கிப் பழகிய முறையையும் கணக்குப் போட்டுக் கொண்டு என்னென்னவோ எண்ணிக்கொண்டிருந்தாளே.அவைபொய்த்துப்போய்விடுமா?

பம்பாய்க்குப் போன பையன் விவரமாக ஒரு கடிதம் போட்டிருக்கலாம். ஒரு சமயம் அவர்கள் இருவரும் அவனைப் பற்றித் தப்புக் கணக்குப் போட்டு விட்டார்களோ?

அங்கேயே அவன் அக்கா அவனுக்குப் பெண் பார்த்து வைத்திருக்கிறாளோ என்னவோ?

சந்தியாவுக்கு அவன் மீது பலத்த சந்தேகம் ஏற்பட்டுத்தான் தன் மன அதிர்ச்சியை மறைக்க வீட்டைச் செப்பனிடும் பணியில் தீவிரமாக இறங்கி இருக்கிறாளோ?

கிரிதரன் ஒழுக்கமான வாலிபன் என்று நம்பியது தவறு? இந்தக் காலத்து இளம் பெண்கள், வாலிபர்களின் மனப் போக்கை அவளால் புரிந்து கொள்ள முடியவில்லையே!

இறந்துபோனஅண்ணனை நினைத்துக்கொண்டாள் ஜகதா. அவளையுமறியாது கண்களில் நீர் பொங்கிக் கன்னத்தின் மீது வழிந்தது. மெல்லத் தலையைத் தூக்கிப் பார்த்தாள். சந்தியா உடல் அயர்ச்சியால் நன்றாக ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருந்தாள். மெல்லக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு மறுபக்கம் திரும்பிப் படுத்தாள் அத்தை.

'அனலாமஸ்வரா! உன்னையேதான் நம்பிக் கொண்டிருக்கிறேன். இந்தப் பொண்ணுக்கு ஒரு நல்ல வழி காட்டப்பா. உனக்கும் அம்பிகைக்கும் குளிரக் குளிரப் பால் அபிஷேகம் செய்து வைக்கிறேன்...'மனமுருகப் பிரார்த்தித்துக் கொண்டாள்.

அந்தச் சனிக்கிழமைக் காலையிலேயே மாட்டுக் கொட்டில் வேலையை ஆட்கள் துவங்கி விட்டனர்.

உள்ளுக்கும் வாயிலுக்கும் மண் கப்பிய கால்களுடன் வேலையாட்கள் நுழைவதும், திடும் திடும் என்று பின் பக்கத்திலிருந்து திமுகக் கட்டையின் ஓசையும் அத்தைக்குத் தலை வேதனையாக இருந்தது.

சிறிதுகூட உட்காராது சந்தியா உள்ளுக்கும் வாயிலுக்கும் நடந்து கொண்டிருந்தாள்.

திங்கட் கிழமை மாலைதான் வேலை முற்றுப்பெறும் என்பதை அறிந்து கொண்டதும் அவள் மாரப்பனிடம் அவசரமாக ஒரு நாள் லீவுக்கு மனு எழுதி அவனைப் பூதலூருக்கு அனுப்பி வைத்தாள்.

''ஏற்கனவே உன்மேல் தலைவி கோபமாக இருக்காங்கன்னு சொன்னே. திடுதிப்புன்னு லீவு போட்டா... அவங்க இன்னும் அதிகம் கோவிச்சுக்க மாட்டாங்களா...''

''அவசரத்துக்கு லீவு எடுக்கலாம் என்ற சலுகை இருப்பதால் அதை உபயோகித்துக் கொள்கிறேன். — தலைவியின் கோபம் எனக்கு லாபம். கவலைப்படாதிக்க அத்தை.'' என்று சந்தியா அசட்டையாகப் பதிலளித்தாள்.



# புத்துணர்ச்சிதரும் தூய சுவாசம் ...
# உறுதியிக்க, ஆரோக்கியமான பற்கள்

## அளித்திடுதே கோல்கேட் டென்டல் க்ரீம்

ஒவ்வொரு சாப்பாட்டிற்குப் பிறகும் கோல்கேட் கொண்டு உங்கள் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். உலகெங்கும் பல் டாக்டர்கள் சிபாரிசு செய்வதைப் போலவே அது உங்களைப் பாதுகாக்கிறது.

உங்கள் பற்களுக்கிடையே தங்கியுள்ள உணவுத் துணுக்குகளில் பாக்டீரியாக்கள் வளர்கின்றன. இவை வாய் துர்நாற்றத்தையும், பிறகு வலிமிக்க பற்சிதைவையும் உண்டாக்கும்.

எனவே சாப்பிட்டு முடித்தவுடனேயே கோல்கேட் முறையில் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். அது புத்துணர்ச்சியுடன் இனிய சுவாசத்தைத் தருவதற்கும், பற்களுக்கு வெண்மையளிப்பதற்கும், பற்சிதைவை எதிர்ப்பதற்கும் மிகவும் சக்தி வாய்ந்தது என்று நிரூபணமாகியுள்ளது.

**கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும், பெப்பர்மின்ட் சுவை பல்துலக்குவதை ஒரு இன்ப அனுபவமாக்குகிறது.**

**சுலபமான, கோல்கேட்டின் செயல் புரியும் முறை**



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற, செயல்புரியும் நுரை ஆழ் ஊடுருவிச் சென்று உபாதை தரும் உணவுத் துணுக்குகளையும் பாக்டீரியாக்களையும் அகற்றி விடுகிறது.



பயன்: கவர்ச்சிமிக்க வெண்மையான பற்கள், தன்னம்பிக்கை தரும் இனிய சுவாசம், பற்சிதைவுக்கெதிரான பாதுகாப்பு.

**கோல்கேட் டென்டல் க்ரீம் உபயோகித்து வாய்துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்**




DC-G-74 TM

பேசியபடியே மாரப்பன் கொண்டுவந்த ஆட்கள் துரிதமாக வேலையைக் கவனித்தனர். மூன்றே நாட்களில் கொட்டகை தயாராகிவிட்டது. தரை மீது வைக்கோலைப் பரப்பி பசுங்கன்றை வேப்ப மரத்திலிருந்து அவிழ்த்து உள்ளே கொட்டடியில் கட்டிவிட்டு வந்தான் மாரப்பன். "இனி மூணு வருஷத்துக்குக் கவலை இல்லே. கூரை பிரிஞ்சா அப்பப்ப இரண்டு கீத்தை வெச்சுக் சாக் கட்டிடலாம். இப்போ உங்களுக்குச் சந்தோஷம்தானே?..." என்று பற்களைக் காட்டியபடி அவள் எண்ணிக் கொடுத்த பணத்தைப் பெற்றுக் கொண்டு ஆட்களுடன் கிளம்பினான்.

அவர்கள் அனைவரும் சென்ற பிறகு அத்தை வீட்டைத் துப்புரவாகப் பெருக்கித் துடைத்துச் சுத்தம் செய்தாள். சந்தியா பகல் பொழுதுகூடச் சரியாகச் சாப்பிடவில்லை என்ற கவலையுடன் அவசரமாக மாலை டிபன் தயாரிக்கச் சமையலறைக்குள் மறைந்து விட்டாள்.

அலுப்புத் தீர சந்தியா பச்சைத் தண்ணீரில் குளித்துவிட்டு மாற்று உடை அணிந்து கொண்டு தலையை வாரி முடிந்து, பொட்டு வைத்துக் கொண்டு மறுபடியும் பின் பக்கத்துத் தோட்டத்தைப் பார்வையிடப் போனாள். புதிதாக உருவாகியிருந்த கொட்டடி மனத்துக்குப் பெரும் நிம்மதியைத் தந்தது. செல்லக் குட்டியின் ஞாபகமாக அதனுடைய கன்றை மிகவும் கவனமாகக் கருத்துடன் கவனிக்க வேண்டும் என்று எண்ணியபடி மாரப்பன் வெட்டிக் கொண்டு வந்து வைத்துப் போன புல் கட்டைஅவிழ்த்துக் கன்றுக்குட்டிக்குப் போட்டாள்.

சமையலறையில் அத்தை பரோட்டா சுடும் நெய் மணம் தோட்டம் வரை எட்டிக் கொண்டிருந்தது.

"சாப்பிடு...இன்னொண்ணுபோட்டுக்கோ என்று அத்தை ரொம்பவே உபசரிக்கப் போறாங்க..."என்றுஎண்ணித் தனக்குள்ளே சிரித்துக் கொண்டு தோட்டத்தைச் சுற்றிலும் பார்வையை ஓடவிட்டாள். அவளருகே நின்று கொண்டிருந்த டாம்சன் திடீரென்று பாய்ந்து உற்சாகமாகக் குரைத்தபடி வாயில் பக்கம் ஓடுவதைக் கண்டு வியப்புடன் பார்த்தாள்.

நேரம் காலம் இன்றி நினைத்தபோது வந்து நிற்கக் கூடிய ஒரே ஒரு விருந்தாளி அத்தான் குமரேசன்தான். சேலம்வரை சென்று தான் செய்துவிட்டு வந்த விஷமம் எவ்வளவு தூரம் வேலை செய்திருக்கிறது என்பதை வேவு பார்க்க வந்திருக்கிறார்போலும்.

மனம் கசந்தவளாகத் திரும்பி வாயில் பக்கம் பாராது தோட்டத்தையே வெறித்துக்கொண்டு நின்றாள்.

பின்னால் காலடி ஓசை கேட்டபோதும் அவள் திரும்பவில்லை.

மாலை வெய்யிலில் தன் அருகே தரைமீது விழுந்த அந்த நெடிய நிழலைக் கண்டு திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

"இங்கே இருப்பதாக அத்தை சொன்னாங்க. கூட... புதுசா மாட்டுக் கொட்டில் கட்டி முடிச்சிருக்கிங்களே பேஷ்... நான் காலையில்தான் வந்தேன். பூதலூர் கிளினிக்கைக் கவனிச்சுட்டு இந்தக் கிராமத்து கிளினிக்கைப் பார்வையிட வந்தேன். மாரப்பன் சுத்தமாகவே வைத்திருக்கிறான். அவன்தான் சொன்னான் இன்னிக்கு நீங்க பள்ளிக்கூடத்துக்கு லீவு போட்டுவிட்டு வீட்டிலே தங்கியிருப்பதாக... அதனால்...."

இந்தச் சில நாட்களில் அவன் முகம் முன்னைவிடச் சிறிது உப்பி மேலும் சிவப்பாகத் தெரிவதைக் கவனித்தாள்.

கொல்லை வாசற்படியில் நின்ற அத்தை மென்று விழுங்கினாள்.

"வந்ததும் உன்னைவிசாரித்தார். பின்னாலே இருக்கேன்னு நான்தான் சொன்னேன்!"

சந்தியாவைப் பரிதாபமாகப் பார்த்தாள் அத்தை.

"அத்தை, டாக்டர் பசியாக இருப்பார். சூடா காப்பியும் பரோட்டாவும் கொடுங்க" என்று கூறிவிட்டுப் பொங்கிக் கொண்டு வந்த அழுகையையும் ஆத்திரத்தையும் அடக்கக் கீழுதட்டைப் பலமாகக் கடித்துக் கொண்டு கிரிதரனைப் பார்க்காது முகத்தைக் கொட்டிலின் பக்கம் திருப்பிக் கொண்டு நின்றாள்.

'இத்தனை நாள் எங்கேயோ போய் ஒளிந்து கொண்டிருந்துவிட்டு இப்போது வேடிக்கை பார்க்க வந்திருக்கிறீர்களா?' ஆத்திரமாக அவனிடம் கத்த வேண்டும் போன்ற ஓர் ஆவேசத்தில் உடல் நடுங்குவதை உணர்ந்தாள். அதே சமயம் அவனைக் கண்டதும் ஏன் இப்படி நெஞ்சு படபடவென்று துடிக்க வேண்டும்? பிரிவின் தாபத்திலே கண்களில் ஏன் இப்படி நீர் புரள்கிறது! ஊஹூம்... அவன் இப்போது திரும்பிப் பார்க்கக் கூடாது. அவள் அழுவதைப் பார்த்துவிட்டால் அவருக்கு ரொம்ப இளக்காரமாகி விடும்... முகத்தைக் கடுமையாக்கிக் கொண்டு கண்ணீரைச் சிரமப்பட்டு அடக்கியவண்ணம் அவன் கொட்டிலைப் பார்த்தபடி அசட்டையாக நின்றாள். (தொடரும்)

**கணவன்:** "சோலார் குக்கர் வாங்கித்தரச் சொல்லிட்டு அதைப் பயன் படுத்தாமல் வழக்கம்போல் விறகு அடுப்பில் சமையல் செய்யறியே... ஏன்?"

**மனைவி:** "நடுவீதி வெயிலில் சமையல் செய்யக் கூச்சமாயிருக்குங்க!"

- உ. ராஜாஜி

சோலார் குக்கர் வந்திருச்சு-1



"எங்கள்
போர்ஹென்ஸ் ஃப்ளோரைடு
குடும்பம்!"



ரவி விரும்புவது இதன் சுவை.
அவனது தந்தைக்குத் தேவை பற்களின் உறுதி.
நானோ, இதை ஈறுகளுக்கென்றே உபயோகிக்கிறேன்.

**ஈறுகளுக்கு போர்ஹென்ஸ் பாதுகாப்பு**
ஈறுகள் பலமின்றி இருந்தால் உறுதியான பற்கள்கூட ஆட்டம் கண்டு விழுந்துவிடும். போர்ஹென்ஸிலுள்ள விசேட சக்திவாய்ந்த அஸ்ட்ரின்ஜென்ட ஈறுகளை பலப்படுத்துகிறது.

**பற்களுக்கு ஃப்ளோரைடு பாதுகாப்பு**
குழந்தைகளில் ஃப்ளோரைடு பற்களின் எனுமலை பலப்படுத்தி சொத்தை ஆவதைத் தடுக்கிறது.
பெரியோர்களில் ஃப்ளோரைடு, பற்சொத்தையை விளைவிக்கும் கிருமிகளை எதிர்க்கிறது.




**போர்ஹென்ஸ் ஃப்ளோரைடு**
ஈறுகள் பற்கள் இரண்டையுமே பாதுகாக்கிறது.



இது நுரை தருகிறது!

284-F 203 TAM

## 17

சித்ரலேகாவுக்குக் காரியாலய அலுவல்களைச் சமாளிப்பதை விட, தன் கீழ் வேலை பார்த்த ஆண்களைச் சமாளிப்பது பெரிய பிரச்னையாகத் தோன்றியது. அநேகமாக அனைவருமே வயதில் அவளைவிட மூத்தவர்களாகவே இருந்தனர். சர்வீஸிலும் அவர்கள் அவளுக்குப் பல ஆண்டுகள் முதியவர்களாகவே இருந்தார்கள். அதனால் அவள் அவர்களிடையே ஜாக்கிரதையாகவே பழக வேண்டியிருந்தது. ஆனால் அவர்கள் தங்களுக்குள் பேசி, வீணாகப் பொழுதைக் கழிப்பதும், அன்றாட வேலைகளில் சீக்கிரம் பைசல் செய்ய வேண்டிய கடிதங்களை இருப்பில் வைப்பதும் அவளுக்கு எரிச்சலூட்டின. தங்களுக்குள்ளாக அவர்கள் அவளைப் பற்றி ஒரு வித மனப்பான்மையோடு பேசுவதையும் கவனிக்க அவள் தவறவில்லை.

ஆண்களுக்கு என்றுமே பெண்களை விடத் தாங்கள் உயர்ந்தவர்கள் என்ற மனோபாவம் உண்டு. ஒரு நாள் சாமிராஜு என்ற குமாஸ்தா துரைக்கண்ணு என்ற மற்றவனிடம் பேசிக் கொண்டிருந்ததை அவள் யதேச்சையாகக் கேட்க நேர்ந்தது.

சாமிராஜு சொன்னார்: 'இந்தப் பொண்ணுக்கு வயசே இன்னும் முப்பது ஆகலே. எனக்கு சர்வீஸ் இருபத்தெட்டு வருஷம் ஆகிப் போச்சு. ஏதோ நாலு புஸ்தகங்களை நெட்ரு செய்து பரீட்சை பாஸ் செஞ்சிட்டா. இன்னிக்கு இவ சூபரெண்டு. நாம அந்தக் காலத்திலே படிக்காம பயாஸ்கோப்பு பார்த்துக் காலத்தைக் கடத்தினோம். இன்னிக்குப் பொட்டச்சிங்க கீழே வேலை பார்க்கலாச்சு!''

துரைக்கண்ணு சொன்னார்: 'ஆமாம் சார் நினைச்சால் சங்கடமாத்தான் இருக்குது. இத்தனூண்டு பொம்பளை கிட்ட அடங்கிப் பதில் சொல்ல வேண்டி யிருக்குது. மூணு மாசத்திலே சித்ரா ஆளே மாறிப்போயிட்டா. அதிகாரம் செய்யறா. திருப்பிக் கேட்டுடலாம். சரி. பொம்பளை கிட்ட எதுக்கு வெவகாரம்னுவிட்டுட்டேன். நம்ம தலையெழுத்து!'

அவள் மனம் வேதனைப்பட்டாள். இந்தப் பெரியவர்கள் தங்கள் பொறுப்புக்களைச் சரிவர உணர்ந்து செயலாற்றாமல், தங்களுடைய மெதுவாக எதையும் செய்யும் ஒரு மந்தமான போக்குக்கு நியாயம் கற்பித்து, எதற்கும் ஒரு பாதுகாப்புக் கேடயமாகத் தங்கள் ஊழிய கால ஆண்டுகளின் கணக்கைச் சொல்லித் தப்பிக்கப் பார்ப்பது அவளுக்கு வேடிக்கையாக இருந்தது. தங்களையுமறியாமல் ஒருவிதத் தாழ்வு மனப்பான்மைக்குத் தங்களை ஆளாக்கிக் கொண்டு, அதன் விளைவால் ஏற்படும் உணர்ச்சிகளின் மோதலில் அவள் மீது தப்புக் கண்டுபிடிக்க முயலும் அவர்களுடைய அறியாமையை எண்ணி இரக்கப்பட்டாள்.

ராஜாமணியின் விஷயம் வேறாக இருந்தது. வேலையில் படு வேகம். அவனுடைய வேகத்திற்கும், அறிவின் ஆற்றலுக்கும் அவனுக்கு இடப்பட்டிருந்த பணிகளின் தரம் ஈடுதர முடியவில்லை. எனவே அவனுக்கு ஓய்வு நேரம் அதிகம் கிடைப்பது போல் தோன்றியது. கலகலப்பான சுபாவமும் பல்வகைப்பட்ட பொருள்களில் அவன் கற்றிருந்த நூலறிவும், நுண்ணிய பார்வைகளும், தர்க்க ரீதியாக எதையும் அலசிப் பார்க்கும் புத்திகூர்மையும் இயல்பாகவே அவனிடத்தில் அவளுக்கொரு ஈடுபாடு ஏற்



படக் காரணமாக இருந்தன. அலுப்புத் தட்டும் நேரங்களில் அவனுடன் பேசுவதை அவள் விரும்பினாள். அவனும் அவளுக்குத் தர வேண்டிய கௌரவத்தையும் மரியாதையையும் தரத் தவறியதே இல்லை. இதனால் அவனிடம் அவளுக்கிருந்த அன்பு வலுப்பெற்றது. அவன் இலாகாவின் தேர்வுகளுக்குப் போகாமலிருப்பதும், உத்தியோகத்தை வெறும் வாழ்க்கைக்குத் தேவையான பணமீட்டும் சாதனமாக மட்டுமே கொண்டிருப்பதும் அவளுக்குப் புதிராகத் தோன்றின. ஆனாலும் மற்றவர்களுடன் பழகுவதை விட அவனுடன் சற்றுத் தாராளமாகவே பழகினாள். அவர்களுடைய இந்த யதார்த்தமான பழக்கத்துக்கு ஒரு காரணம் கற்பித்து, கதை கட்டி, அதையும் தங்கள் அக்கப்போர்ப் பேச்சுக்குக் கிடைத்த அவலாகச் சிலர் மென்று விழுங்கி அசை போட்டபோது அவள் திடுக்கிட்டாள்.

அன்று முதல் அவனிடமும் கண்டிப்பாக நடந்து கொள்ள வேண்டும் போல் தோன்றியது.

சொல்லி வைத்தாற்போன்று அவன் அன்று காரியாலயத்துக்குச் சற்றுத் தாமதமாக வந்

தான். கையெழுத்திடும் ஆஜர் புத்தகம் அவள் மேஜை மீது இருந்தது.

''குட் மார்னிங் மேடம்! அடெண்டன்ஸ் தர் நீங்களா?''

''இப்போ மணி என்ன ஆச்சு?''

''பத்தே முக்கால்!'' அவன் சிரித்துக் கொண்டே சொன்னான்.

''ஆபீஸ் பத்து மணிக்கு ஆரம்பிக்கிறது. பத்தே முக்காலுக்கு இல்லையே!''

அவள் கோபமாகப் பேசுகிறாளா, இல்லை தன்னைச் சீண்டி வேடிக்கை பார்க்கிறாளா என்று அவனுக்குப் புரியவில்லை. பதில் சொல்லாமல் இருந்து விடலாம் என்றுதான் நினைத்தான். இருந்தாலும் அவன் சுபாவம் அதற்கு இடம் தரவில்லை.

''ஓஹோ! நான் நேத்திக்குக் காலையிலே வேலைக்குச் சேரல்லே. சர்வீஸ் பதின்மூன்று வருஷம்.''

''தெரியறது!''

''என்ன?''

''வீண் பேச்சுத் தேவையில்லே! கையெழுத்துப் போட்டு வேலையைப் பார்க்கலாம்.''

''வேலை பார்க்காம வெட்டியா இருக்கவா போறேன்!''

''மிஸ்டர் ராஜாமணி! திரும்பிப் பேசறதை நான் விரும்பவில்லை. உங்க பொஸிஷனை நீங்க உணர்ந்து நடக்கணும்!''

''யெஸ் மேடம்!''

அவளுக்கு மனநிலை சரியில்லை என்பதைப் புரிந்து கொண்டான். பிறகு பேசிக் கொள்ளலாம் என்ற பாவனையில் வேலையில் ஈடுபட்டான். மேற்கொண்டு அவன் பேசாததும் தன்னை ஏறெடுத்தும் பார்க்காது, மும்முரமாகப் பணியில் ஈடுபட்டதும் சித்ரலேகாவின் மனத்தில் எரிச்சல் ஊட்டின.

அவனையே அவள் பார்த்துக் கொண்டிருந்தாள். அவனுடைய அகன்ற நெற்றியில் சுருட்டைக் கேசம் குழலாக விழுந்து மின் விசிறியின் காற்றில் ஆடிக் கொண்டிருந்தது. அகன்ற பெரிய விழிகள். திடகாத்திரமான உடம்பு. தன் மனத்தில் அவனுடைய எடுப்

# கவர்ச்சிகள்

## கிருஷ்ணமணி



பான தோற்றம் ஏற்படுத்தும் பாதிப்பை அவள் தவிர்க்க முயன்றாள்.

அர்ரகண்ட்!.... தமிழில் சொன்னால் திமிர் பிடித்தவன். எதையுமே சர்வ சாதாரண மாக எடுத்துக் கொள்ளும் அவனுடைய போக்கு அவளுக்குக் கோபமூட்டியது. தன்னை அவன் மதிக்கவில்லை போல் தோன்றியது. வார்த்தைகளால் அவனைக் குத்திக் கீற வேண்டும் போலிருந்தது.

அவன் பதிலெழுதின கடிதங்களை அவள் மேஜை மீது இருந்த மர டிரேயினுள் போட்டான். புகை பிடிப்பது அவன் வழக்க மாயிருந்தது. எழுந்து நின்று தன்னிரு கை களையும் தலைக்கு மேலே தூக்கி, பளு தூக்கும் சாம்பியன் போல் சில விநாடிகள் நின்றான். பின்னர் வெளியே வராந்தா வுக்குச் செல்ல முற்பட்டான்.

''மிஸ்டர் ராஜாமணி!'' அவள் குரல் கேட்டுத் திரும்பினான். ''ஒன் மினிட்! இப் படி வர முடியுமா?'' கேள்வியில் அதிகாரம் இல்லை. ஆனால் வேண்டுகோள் இருந்தது. சில நிமிட நேரங்களில் அவள் அவனிடம் மீண்டும் பேச வேண்டும் என்று விரும்பிய தைப் போன்று இருந்தது. அவன் சற்றே தயங்கினான். அவன் வெளியே எதற்காகப் போகிறான் என்பது தெரிந்தே அவள் கூப்பிடு கிறாள் என்பதைப் புரிந்து கொண்டவன் போல் அவளைப் பார்த்தான்.

''ப்ளீஸ்!....'' இப்பொழுது அவள் குர லில் குழைவு இருந்தது.

பேசாமல் அவள் பக்கத்தில் சென்று நின்று கொண்டான். அவனை உட்காரும்படி சமிக்ஞை செய்தாள்.

''ஒரு நாளைக்கு எத்தனை தடவை சிகரெட் பிடிக்கிறீங்க?''

மௌனம்.

''உங்களைத்தான் கேட்கிறேன்.''

''இது என் தனிப்பட்ட விஷயம். ஆபீஸ் சம்பந்தமா ஏதாவது கேட்டால் பதில் சொல்லலாம்.''

''இதுக்கும் பதில் சொல்லணும்!''

''ஸாரி! முடியாது.''

பெல்ஜியம் நாட்டுப் பழமொழிகளுள் ஒன்று தாயைப் பற்றியதாகும்: ''தாயை யாருடனும் ஒப்பிடக்கூடாது. அவள் ஒப் பற்றவள்!'' - பி. நாராயணன்



''என் மேல் கோபமா?''

''இது ஆபீஸ். நம்ம தனிப்பட்ட விருப்பு வெறுப்புக்கு இங்கே இடமில்லே. தவிர நீங்க மேலதிகாரி. நான் சாதாரண குமாஸ்தா. ஆபீஸ் வேலையிலே கோப தாபத்துக்கு இடமில்லேங்கறது எனக்குத் தெரிஞ்சது தான். நான் போகலாமா?''

''இன்னிக்கு மாலே உங்க கிட்டே நான் தனியாக் கொஞ்சம் பேசணும்னு விருப்பப் படறேன். எனக்காக நேரம் ஒதுக்க முடி யுமா?''

''பார்க்கலாம்!'' சிறிது நேரம் மீண்டும் அவளையே பார்த்தான். கள்ளங் கபடமில் லாமல் அவள் சிரித்தாள். அவள் கன்னங்களில் அழகுக் குழி விழுந்தது. தலையை ஒரு பக்க மாகச் சாய்த்துக் கொண்டு, தன் அகன்ற பெரிய விழிகளால் அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். ராஜாமணிக்குத் தன் நிலை மாறுவது போல் தோன்றியது. அங் கேயே இன்னமும் சிறிது நேரம் இருந்தால் தன் வயமிழந்து விடுவான் போலிருந்தது. சரேலென எழுந்தான். அவள் அவனைத் தடுக்கவில்லை. வெளியே சென்றான்.

வராந்தாவில் நாலைந்து பேராக நின்று கொண்டு வம்பளந்து கொண்டிருந்தனர். ஏதோ பொழுது போக்குக்காக சீட்டாடும் கிளப்பொன்றில் இருப்பது போன்று அவர்கள் தங்களுடைய அலுவலக நேரத்தில் இப்படி நேரத்தை விரயமாக்கிக் கொண்டிருந்தது ராஜாமணிக்கு வேடிக்கையாக இருந்தது. தானும் புகை பிடிப்பதற்காக இப்படி வெளியே வருவது தவறு என்பது போல் தோன்றியது.

சித்ரலேகா தன்னிடம் என்ன பேச விரும்பு கிறாள்? காலையில் வந்ததும் வராததுமாகக் கோபித்துக் கொண்டதும் இப்பொழுது சமா தானப்படுத்துவது போல் பேசுவதும்...நல்ல வேடிக்கைதான். பெண்களே சஞ்சல புத்தி உள்ளவர்கள்தாம். நிலையாக எதைப் பற்றி யும் ஒரு வலுவான கொள்கை இல்லாம லிருப்பது அவர்களுக்கு எப்படி முடிகிறது. 'சஞ்சலமே! உன் பெயர்தான் பெண்ணோ?' என்ற ஆங்கிலக் கவிஞனின் வாக்கு அவன் மனத்தில் நிழலாடியது.

## 18

''நாம் இருவரும் இப்படித் தனியாகச் சந்திப்பது சரியென்று உங்களுக்குத் தோன்று கிறதா?'' சித்ரலேகாவின் கேள்வியைக் கேட்டு ராஜாமணி தலைநிமிர்ந்தான்.

''இதில் தவறென்ன இருக்கிறது? நான் உங்களை ஒன்றும் செய்துவிட மாட்டேன் என்று நீங்கள் நம்புகிறீர்கள். உங்களுடைய அந்த நம்பிக்கையை நான் பொய்யாக்க மாட்டேன். என்னைப் பொறுத்த வரையில் நான் எதையுமே கட்டாயத்தின் மூலமாக, என்னுடைய ஆளுமையின் வலுவான ஒரு திணிப்பின் மூலம் சாதித்துக் கொள்ள விரும்ப வில்லை. மேலும் நீங்கள் என்னுடன் பழகு வது கூட ஒரு சாதாரண நிகழ்ச்சி போலத் தான் எனக்கும் படுகிறது. இதில் தவறு, சரி என்பதற்கு என்ன இருக்கிறது?''

''நான் திருமணம் ஆகாதவள். இப்படி ஓர் ஆடவருடன் பழகுவது சரியா?''

''சரியில்லே என்று உங்கள் மனத்திலே தோன்றிய க்ஷணத்திலேயே நீங்கள் பழகுவதை நிறுத்திவிட வேண்டும். மதில் மேல் பூனையாக எந்த விஷயத்திலும் இருக்கக் கூடாது. நம்முடைய பழக்கம் உங்களுடைய எதிர் காலத்தைப் பாதிக்கும் என்று நீங்கள் கருதினால், அல்லது நீங்கள் எனக்கு என்றுமே ஒரு நண்பனின் ஸ்தானத்தை மட்டுமே உங்கள் மனத்தில் அளிக்க முடியும் என்று கருதினாலும் இதை நீங்கள் நிறுத்திவிடலாம். மனத்தளவில் நம்மிருவருக்கும் சங்கடம் ஏற்படும் என்பது உண்மைதான். ஆனால் அதுவும்கூடக் காலப் போக்கில் சரியாகிவிடும். எந்தவிதமான துயரஎண்ணமும் காலம் என்ற பெருவெளியில் கரைந்து போகக் கூடியது தான். ஸோ! நீங்க எங்கிட்டே பழகறதைக் குறைச்சிக்கிறதோ அல்லது நிறுத்திக்கொள்றதோ உங்க விருப்பம். இதிலே என் அபிப்பிராயம் வேறெதுவும் இல்லே!''

அவள் கண்களின் விளிம்பில் நீர்த் திரையிட்டது. இப்பொழுது அவளால் பேச முடியவில்லை. தான் எதையோ சொல்ல நினைத்ததும், அவன் எதிர்மாறாக எதையோ பேசி ஒரு முத்தாய்ப்பு வைத்தது போல் பேசி நிறுத்தியதும் கூட அவளுடைய உள்ளத்தில் வேதனையை உண்டாக்கியது.

பேச்சை மீண்டும் எப்படித் தொடருவது என்று அவன் யோசித்தான். ராஜாமணியின் மனத்தில் தான் சகஜமாகக் கேட்டது கோபத்தை உண்டாக்கி யிருக்கக் கூடுமோ என்று எண்ணினான். மனத்தைச் சரிசெய்து கொண்டு கேட்டான்:

''ஸோ! உங்களுக்கு எதிலேயும் ஒரு பற்றோ பாசமோ இல்லேங்கற மாதிரி பேசறேனே!''

''இதிலே பற்று வைக்க என்ன இருக்கு? சாதாரண உலக வழக்கப்படி பார்த்தால் ஐ மீன், லௌகிகமாகப் பார்த்தால் நான் உங்களை அடையணும்னு நினைக்கிறதே சரி இல்லே. நீங்க கிராஜுவேட், தவிர நல்ல பொஸிஷன்லே இருக்கீங்க. இந்த இலாகாவிலே இன்னும் அஞ்சாறு வருஷத்திலே உங்களுக்கு ஆபீஸர் பிரமோஷன் கிடைச்சுடும். நான் யார்? என் நிலைமை என்ன? இதை நான் ஒரு தாழ்வு மனப்பான்மையோடு சொல்லல்லே. யதார்த்தமான உண்மைகளைப் பார்த்துத்தான் தீரணும். முதல்லே நான் பட்டதாரி இல்லே. இரண்டாவது இலாகா தேர்வும் எழுதலே. எழுதறதாவும் உத்தேசம் இல்லே. சாதாரண குமாஸ்தா. படிப்பு, அந்தஸ்து இது ரெண்டும் எனக்கு இல்லே. எனக்குன்னு சில லட்சியம் இருக்கு. அதுகளுக்காக நான் என்னை வருத்திக்கிறதோ அல்லது ஒரு கடினமான வாழ்க்கைக்கு என்னை உட்படுத்திக்கிறதோ நியாயமா இருக்கலாம். ஆனால் உங்களையும் உட்பட வைக்க எனக்கு என்ன உரிமை இருக்கு? என்னை விடப் பல விதங்களிலேயும் தகுதி வாய்ந்த ஒருத்தர் உங்களுக்குக் கணவனா வரலாம். அந்த வாய்ப்புக்களை நீங்க ஏன் இழக்கணும்?''

''பொஸிஷன், பணம் இதைப் பத்தி நான் என்னிக்குமே கவலைப்பட்டவள்



குடுமி அலவன்ஸ்!

அருள்மிகு ஜம்புகேசுவரர் அகிலாண்டேஸ்வரியம்மன் திருக்கோயிலில் (திருவானைக்கா-திருச்சி) குடுமி வைத்துக்கொண்டு திருமுறைப் பணியாற்றும் ஓதுவாருக்கு மாதம் ஐந்து ரூபாய் 'குடுமி அலவன்ஸ்' என்ற பெயரில் இன்னும் வழங்கி வருகிறார்கள். - ஆர். கோபாலன்

இல்லே. என் மனசார நான் நேசிக்கிற ஒருத்தரை அடைய விரும்பறேன். காரியாலய வாழ்க்கையும், தனிப்பட்ட வாழ்க்கையும் எப்படி ஒன்றாக முடியும்? என்னுடைய காரியாலய அந்தஸ்து என் தனிப்பட்ட வாழ்க்கையிலே குறுக்கிட நான் அனுமதிக்க மாட்டேன்!''

'' உணர்ச்சிகளோட மோதல்களிலே மனசு அலைபாயும்போது இந்த மாதிரிப் பேசலாம். ஆனால் அமைதியாச் சிந்திச்சுப் பார்க்கிற நேரத்திலே இதெல்லாம் அர்த்தமில்லாத ஓர் உணர்ச்சிக் கொப்பளிப்பாகத் தான் தெரியும். அந்த மாதிரிச் சமயத்திலே நாம அவசரப்பட்டு முடிவெடுத்திட்டோமோன்னுகூடத் தோணலாம். தவறு செஞ்சிட்டாப்ல தோணலாம். தவறு நேருவதற்கு முன்னால் அதைத் தடுத்து நிறுத்தறது தான் விவேகம். இல்லையா?''

இப்பொழுது அவன் அவளையே பார்த்தான். பேசி வெற்றி காண்பது முடியாத காரியம் போல் தோன்றியது. இவருடைய புத்தி தீட்சண்யம், உண்மையை அணுகும் பாங்கு இவைகளுக்காகவே வாழ்நாள் பூராவும் ஒன்றிணைந்து இருக்கலாம் போல் தோன்றியது. ஆனால்... பிடி கொடுக்காமல் பேசும் இவரை எப்படி வழிக்குக் கொண்டு வருவது?

சித்ரா சுதாரித்துக் கொண்டு பேசினாள். 'நான் ஒன்றும் குழந்தை இல்லே. டீன் ஏஜ் பெண்ணும் இல்லே. இன்னும் ஒரு வருஷத்திலே வயசு முப்பதாயிடும். சொல்லப் போனா அரைக்கிழம். என்னுடைய எல்லைகள் எனக்குத் தெரியும். என்கிட்டே ஆண்களைக் கவர்ந்திழுக்கும் உடலழகு இல்லே. ஐ ஆம் மோர் மேஸ்குலைன் இன் மெனி திங்ஸ். ஓர்க்ஸ் செக்ஷன் நிர்மலா போல் இருந்தாலும் நான் பெருமைப்படலாம். அவளுக்கு அழகு இருக்கு. நல்ல உடல்வாகு. ஆண்களுக்கு இனக் கவர்ச்சியைத் தூண்டுவதே பெண்களின் உடலழகுதானே?''

ராஜாமணி சிரித்தான். ''என்னைப்போல இருக்கிறவனுக்கு உங்களைத்தான் பிடிக்கும்

ஐ லவ் யுவர் மைண்ட். இன்டலெக்சுவல் அப்ரோச். வெறும் மேனி அழகுக்கு மயங்கிப் போறவன் இல்லே நான். அதனாலேதான் உங்களோட பழக ஆரம்பிச்ச நாளிலேருந்து என் மனசில் ஒரு சலனம் ஏற்பட்டிருக்கு. எது எப்படியானா என்ன? நாம ரெண்டு பேரும் ஒண்ணாகை முடியாதுன்னுதான் தோணறது. என்னைப் பொறுத்தவரை பெண் என்கிறவ . வெறும் சிம்பல் ஆஃப் செக்ஸ் இல்லே. ஐ லவ் யூ! உன்னோட சாதுர்யத்துக்காக, உண்மைக்காக, நேர்மைக்காக. ஐ லவ் யூ! ஆனா என்னை நானே அந்நியப் படுத்திக்கணும்.''

''எதுக்காக?''

''அதுதான் நம்ம ரெண்டு பேருக்குமே நல்லது. கஷ்டமான சமாசாரம்தான். என்ன பண்றது? ஆனா அது நடந்தே தீரணும் போலத் தோணறது. வேறே வழி இல்லே!''

''மனசுக்குச் சங்கடமும் சிரமமும் ஏற்படுத்திக்கிறதுகூட உங்க இலட்சியம்தானா?'' சொல்லிவிட்டு அவள் தன் பின்னலே இடது புறமாக எடுத்து முன் பக்கம் விட்டுக்கொண்டாள். மீண்டும் கன்னங்களில் குழி விழச் சிரித்தாள். மௌனமான சிரிப்பு. அவன் தன் உள்ளத்தில் அவளுடைய இந்தத் தோற்றம் ஏற்படுத்தும் சலனத்தை உணர்ந்தான்.

''ப்ளீஸ்! அப்படிப் பார்க்காதே சித்ரா! நான் உன்னிடமிருந்து பிரிந்து போகவே முடியாது போல் இருக்கு. சொல்லப் போனால் நான் கொஞ்சம் கொஞ்சமாய் உனக்கும், உன்னைப் பற்றிய நினைப்புகளுக்கும் அடிமையாயிண்டு வரேன்போல இருக்கு. என்னை விலக்கிக் கொள்ளணும்னு முயற்சி செய்யிற அதே நேரத்திலே இந்த என்னையே நான் இழக்கும் நிலைமையையும் உணர முடியறது. என்னை மீட்க நான் முயற்சி பண்றேன்!''

''இதிலே என்ன இழப்பு இருக்கு? நீங்க உங்களையே ஏமாத்திக்கப் பார்க்கறீங்களா?''

''ஆமாம். இது ஒரு வகையிலே பார்த்தால் அப்படித்தான் இருக்கு. இத்தனை வருஷமா நான் எந்தப் பெண்ணிடத்திலேயும் என் மனசை இழக்கல்லே. அதையே ஒரு பெருமையா நினைச்சிண்டிருக்கேன். ஆனால்...''

''ஆனால்....'' அவள் அவனையே தீவிரமாகப் பார்த்தாள்.

''ப்ளீஸ் சித்ரா!'' அவன் அவள் கரங்களைப் பற்றினான்.

''ஐ லவ் யூ டார்லிங்! ஐ லவ் யூ!''- அவள் காதருகில் முணு முணுத்தான். இப்போது அவனால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. அவன் கன்னங்களை அவன் இதழ்கள் ஸ்பரிசித்தன. அவள் மறுப்பேதும் காட்டவில்லை. மாறாகத் தன் இடது கரத்தினால் அவன் கேசத்தைக் கோதி விட்டாள்.

''சித்ரா ஐ லவ் யூ!'' ராஜாமணி கண்களை மூடிக் கொண்டே தன் இதழ்களை அவள் இதழ்களுடன் பொருத்தினான்.

அங்கே ஒரு மௌனமான இன்பம் நிலவியது. மீண்டும் மீண்டும் அவன் உணர்ச்சி வசப்பட்ட நிலையில் முத்த மாரி பொழிந்தான். அவளால் தன்னை விலக்கிக்கொள்ள முடியவில்லை. தன்னையும் அறியாமல் அவள் அவனை இறுக அணைத்துக் கொண்டாள். சில நிமிட நேர அரவணைப்பும், இதழ்களின் ஸ்பரிசங்களும் அவர்களிடையே நெருக்கமான ஓர் உறவுக்கு அஸ்திவாரம் போல் அமைந்தன!

சரேலென அவள்தான் விலகிக் கொண்டாள். தன் இடது புறங்கையினால் தன் உதடுகளைத் தடவி விட்டுக் கொண்டாள். அவளால் ஏதுவும் பேச முடியவில்லை.

இப்பொழுதும் அவனே பேசினான். ''சித்ரா! நீ என்னைத் தவறாக நினைக்காதே! உணர்ச்சி மிகுதியினால் நான் கட்டுப்பாடு இழந்து விட்டேன் ப்ளீஸ்!''

அவள் புன்னகைத்தாள்.

அவளுடைய கரங்களைப் பற்றியவாறே அவன் பேசினான். ''நான் மேனாட்டு நாவல்களைப் படித்தபோது இந்த மாதிரிச் சம்பவங்களைப் பற்றிப் படித்ததுண்டு. எழுத்தாளர்கள் எதையுமே மிகைப்படுத்துவார்கள் என்று எண்ணியதுண்டு. இல்லை! அவர்கள் உண்மையைத்தான் அழகுபட, கலை நயத்தோடு சொல்கிறார்கள். இந்தச் சில நிமிடங்களில் என்னுள் ஏற்பட்ட ஒரு பரவசம், கிளுகிளுப்பு, இவற்றை நான் என்றுமே மறக்க முடியாது. சொன்னால் உனக்கு வேடிக்கையாகக் கூட இருக்கும். வயது முப்பத்திரண்டு ஆகியும் இதுவரை நான் எந்தப் பெண்ணோடும் தொடர்பு வைத்துக் கொண்டதில்லை. இதுவே என் கன்னி முயற்சி. இத்தனை ஆண்டுகளை நான் வீணாக்கி விட்டேனோ என்றுகூடத் தோன்றுகிறது. ஆனால் இந்த ரசானுபவம் எனக்குக் கிடைத்திருக்காது!''

''பேஷ்! நீங்களே ஒரு கவிஞனைப் போலத்தான் பேசறீங்க!''

''சித்ரா! ஐ லவ் யூ!''

''ம்.....''

''நீ சொல்லவே மாட்டியா?''

''ம்.....'' அவள் தலையைச் சாய்த்துக் கொண்டு பார்த்தாள்.

அவன் காரணமில்லாமல் சிரித்தான். அவளும் அவன் சிரிப்பில் கலந்து கொண்டாள். தூய அன்பினால் பிணைக்கப்பட்ட இரு உள்ளங்களின் ஆனந்த பரவசம் அங்கே எதிரொலித்துக் கொண்டிருந்தது. (தொடரும்

''ரமேஷ் என்னைப் பார்க்கிறபோதெல்லாம் தலைவலி, தலைவலி என்கிறான்...!''
''ஒரு காபி குடித்தால் தலைவலி பறந்து போய் விடும்னு அவனுக்குத் தெரியாதா...?''
''அதைத் தெரிந்து வைத்துக் கொண்டுதான் இப்படிச் சொல்றான்...!'' - ரவி



# விடிவதற்குள் வா!

ஆகஸ்ட் 1
ஆண்டு மலரில்
ஆரம்பம்





# எனக்கும்

**சுபா**

''சந்தோஷமாய் இருந்தது. மனசு முழுக்கக் கொண்டாட்டமாயிருந்தது. வரிசையாய்ப் பாராட்டுக்கள் வந்து குவியும் போது நன்றி சொல்லி நன்றி சொல்லி நாக்குத் தடித்துப் போயிற்று.

ராமகிருஷ்ணன் மாத்திரம் தனியாய்க் கூப்பிட்டான். நரேந்திரன் சிரித்த முகத்தோடு போனான்.

''சொல்லுங்க ராமகிருஷ்ணன்...''

''ஒரு காதல் கதையை இவ்வளவு அழகாச் சொல்ல முடியும்னு நான் நெனைச்சே பார்த்ததில்லே. பத்திரிகையிலேயும் அதைப் புரிஞ்சுக்கிட்டுத்தான் கலர்ப் படம் போட்டு அட்டகாசமா பப்ளிஷ் பண்ணியிருக்காங்க.. கங்கிராட்ஸ்...''

''தாங்க்யூ...,''

''ஒரு சின்னச் சந்தேகம்... தப்பா நெனைச்சுக்காதீங்க....''

''சொல்லுங்க...''

''அனுபவம்தானே....?''

நரேந்திரனுக்குச் சட்டென்று நாணத்தில் முகம் சிவந்து போயிற்று.

''ஆமா,...'' என்றான், மெல்லியதான கிளுகிளுப்புடன்.

அவன் அந்தரங்கத்தைக் கண்டுபிடித்து விட்ட சந்தோஷத்தில் ராமகிருஷ்ணன் கையைக் குலுக்கினான்.

''யாரு....? நம்ப ஆஃபீஸா...?''

''இந்த கோடௌன்லேர்ந்தா...?'' என்று கேட்டான் நரேந்திரன்.

'ஹா ஹா...' என்று சிரித்துவிட்டு அகன்று போனான் ராமகிருஷ்ணன். அந்த ஹாஸ்ய சந்தோஷத்தில் 'அவள் யார்' என்பதைத் தெரிந்து கொள்வதைப் பற்றி மறந்து போய் விட்டான்.

ஆனால் கிருத்திகாவைப் பற்றியாருக்குமே தெரியாமல் போய்விடவில்லை. ரொம்ப நெருங்கிய வட்டத்தில் அவன் மூலமாய் அவளைப் பற்றி நிறையப் பேருக்குத் தெரியும். அவனது அவ்வப்போதைய அனுபவங்களின் சில துணுக்குகள் அந்த வட்டத்துக்கு ஏற்னவே தெரிந்திருந்ததில், இதுவரை கேட்டு வந்த அனுபவங்களை இப்போது எழுத்தில் காண்கையில் அவர்களுக்கும் சந்தோஷமாய் இருந்திருக்க வேண்டும். தங்களுக்கு முன்பே தெரிந்த ஒன்று இப்போது தான் மற்றவர்களுக்குத் தெரியப் போகிறது என்ற எண்ணத்தில் ஏற்பட்ட இயல்பான சந்தோஷம். அதுதான் பத்திரிகை வெளியான நான்கு நாட்களாய்ச் சந்தோஷத்தை வெளிப்படுத்திக் கை குலுக்கி, முதுகில் தட்டி, காஃபி சாப்பிட்டு, சிகரெட் புகைத்துப் போனார்கள்.

கூடவே பதில் கிடைக்காத ஒரு கேள்வியை வேறு கேட்டார்கள். ''ஒங்க ஆளு என்ன சொன்னாங்க?''

நரேந்திரனும் அந்தக் கேள்விக்குத்தான் விடையைத் தேடி நான்கு நாட்களாய்த் தவித்துப் போயிருந்தான். கிருத்திகாவிடமிருந்து இன்னும் ஃபோன் வரவில்லை.

ஆறும் நாள் போன் வந்தது.

''கிருத்திகா...'' என்றது மெல்லிய குரல்.

''கிருத்தி... என்ன கிருத்தி இப்படித் தவிக்க வச்சுட்ட...?''

''......''
''கிருத்தி....''
''.......''
''ஹலோ... ஹலோ.... கிருத்தி: ஆர் யுதேர்?''
''ம்.....''
''கிருத்தி... சௌக்யமா?''
''ஆமா....''
''ஏன் கிருத்தி?''
''அந்தக் கதை....?''
''ஏன் கிருத்தி....?''
''கொஞ்சம் கூட நல்லா இல்லே.''
''அந்தக் கதையா?''
''கதையும் சரி... நீங்க செஞ்சதும் சரி.''
நரேந்திரன் உண்மையில் பதறிப்போனான்.
''என்ன கிருத்தி செஞ்சேன்?''
''அந்தக் கதைய ஏன் எழுதினீங்க?''
''எல்லாரும் ஓஹோன்னு சொல்றாங்க, கிருத்தி....''
''சொல்லுவாங்க... அடுத்தவன் பொண்டாட்டியை நிர்வாணமாப் பார்க்கறதுன்னா யாருக்குத்தான் பிடிக்காமப் போகுமாம்?''
''கிருத்தி....''
''நரேன்... ஏன் நரேன் இப்படிச் செஞ்சீங்க?''
''என்ன கிருத்தி இது... நான் என்னென்னவோ நினைச்சுக்கிட்டிருந்தேன்... நீ என்னென்னவோ சொல்றியே?... நாம நேரில பார்த்துப் பேசினா சரியாப் போயிடும் கிருத்தி....''
''பார்க்க வேணாம்....''
''கிருத்தி... ப்ளீஸ்... நாம நேரில பார்த்துப் பேசினாத்தான் என்னால உன்னைக் கன்வின்ஸ் பண்ண முடியும்...''

# உனக்கும்

[illegible] வரைக்கும் போதும்....''
''கிருத்தி டார்லிங்... ப்ளீஸ்....''
டொக்.

தூரங்கு ஆப்பை எடுத்த கதையாக இருந்தது நரேந்திரனுக்கு. நிஜமாகவே கண்ணில் நீர் திரண்டிருந்தது. ஃபோனுக்காகப் பாதிச் சாப்பாட்டில் எழுந்து வந்திருந்ததால் கை உலர்ந்து போயிருந்தது. சாப்பாட்டைப் பார்க்க எரிச்சலாய் வந்தது. சாப்பிடப் பிடிக்காமல் அதை அப்படியே எடுத்துச் சுருட்டி ஜன்னலுக்கு அந்தப்புறமாய்ப் போட்டான். தெருவில் போகிற நாயாவது பசியாறட்டும்.

தன்னிரக்கம் மிகுந்து போனதில் அவள் கட்டளையை மீறிக் கடைக்குப் போய் ஒரு சிகரெட்டை வாங்கிக் கை நடுமளவுக்கும் இழுத்துக் கொண்டே இருந்தான்.

அடுத்த வாரத்தில் நாலாவது நாள் மறுபடியும் ஃபோன் வந்தது. இத்தனை பெரிய இடைவெளி விழுந்திருந்ததில், முற்றுகையிட்டிருந்த சோகம் கிருத்திகாவின் குரலைக் கேட்டதும் வாரிச் சுருட்டி ஓடிப்போயிற்று.

''கிருத்தி... உன் கோபம் தீர்ந்து போச்சா கிருத்தி...?''
''இல்லே...''
''பின்ன ஏன் கூப்பிட்டாயாம்?''
''வச்சுடட்டுமா?''
''வேணாம்... வேணாம்.. ப்ளீஸ்...''
''அந்தக் கதைக்கு இன்னும் பாராட்டுங்க வந்துக்கிட்டிருக்கா?''

''அந்தக் கதையைப் பத்தி நான் யார் கிட்டயும் இப்பல்லாம் பேசறதில்லே கிருத்தி! அன்னிக்கு 'பச்சக்'னு மூஞ்சில் அடிச்ச மாதிரி நீ ஃபோனை வைச்சதிலேயிருந்து நான்

தேவதாஸ் மாதிரி ஆயிட்டேன் கிருத்தி... சாப்பாடு பிடிக்கலே... டி.வி. பிடிக்கலே... சினிமா பிடிக்கலே...."

"நெஜமும்...?"

"சத்தியமா கிருத்தி... நாம எப்பப் பார்க்கலாம் கிருத்தி... ப்ளீஸ்... முடியாதுன்னு சொல்லிடாதே... நான் உன்னைப் பார்த்தேயாகணும்.... ப்ளீஸ்..."

"ஓ.கே."

"தாங்க்யூ...தாங்க்யூ...எங்கே கிருத்தி?"

"எப்பவும் பார்க்கற எடம்... பூஷாவல் டைடம்... ஆனா இன்னிக்கில்ல... நாளைக்கு."

"நாளைக்கு ஃபோன் பண்ணி ப்ரோக்ராமைக் கான்சல் பண்ண மாட்டியே..."

"பார்க்கலாம்...."

"சரி...சரி... ஃபோன்ல இப்ப ஒரே ஒரு கிஸ் தரட்டுமா கிருத்தி?"

டொக்.

**ப**ஸ் வந்து நின்றதும் நரேந்திரன் பரபரவென்று தேடினான். கிருத்திகா நிதானமாய் இறங்கினாள். சற்று மெலிதான நீலச் சேலை மிக எடுப்பாய்த் தழுவியிருந்தது. காதில் வழக்கமான தாயரைத் தோட்டுக்குச் சகோதரியாய் ஜிமிக்கி. மெலிதாய் மை தீட்டியிருந்ததில் கண் சற்றுப் பெரிதாய்த் தோன்றிற்று. ஆனால் அவள் எப்போதும் போல் புன்னகைக்காமல் அவனருகில் வந்தாள்.

"கிருத்தி... எத்தனை நாளாச்சு... இன்னிக்கு ரொம்ப அழகா இருக்கே கிருத்தி.."

"போலாமா?" என்றாள் நிதானமாய்.

"எங்கே?"

"முதல்ல கோயிலுக்கு...: அப்புறம் பீச்சுக்கு...."

"கிருத்திகோவம்இன்னும்மிச்சமிருக்கா?"

"இருக்கு.... உங்களை நான் ஒண்ணும் கதை எழுதற நரேந்திரனு நெனைச்சுக்கிட்டு வரலே. நீங்க எழுதற கதையைப் படிச்சிட்டா உங்களை லவ் பண்ணணும்னு எனக்குத் தோணிச்சு?"

"சரி... ஒரு காஃபி சாப்பிட்டுட்டுப் போகலாமா கிருத்தி?"

"ம்..."

மனைவி: "நம்ம வீட்டுக்குப் புதுசா வந்த வேலைக்காரி டர்க்கி டவலைத் திருடிண்டு போய் விட்டாள்!"

கணவன்: "அடப்பாவமே! எந்த டர்க்கி டவலைச் சொல்றே?"

மனைவி: "அதான், போனவாரம் கம்பெனி அக்கவுண்ட்லே ஃபைவ் ஸ்டார் ஓட்டல்ல தங்கிட்டு வரும்போது கொண்டாந்திங்களே அதைத் தான்!"

-ஆ. பானுமதி



காப்பி சாப்பிட்டார்கள். வேளாங்கண்ணி கோயிலின் மெழுகுவர்த்திக் கடைகளையும், கடைக்காரர்களின் "வாங்க லிஸ்டர்" அழைப்புக்களையும் தாண்டிக்கொண்டு இரண்டு பக்கங்களிலும் இருந்த செங் கல்கட்டிடங்கள், குடிசைகள் இடையே நடந்து அஷ்டலட்சுமி கோயிலை அடைந்து, நுழைந்து வலம் வந்தார்கள்.

ஆரவாரமாய் ஆர்ப்பரிக்கிற கடல் அலைகள் கால்களைப் பணிந்து பணிந்து பின் வாங்க, தண்ணீரில் போய் நின்றார்கள். காலுக்குக் கீழிருந்த மணலை அரித்துக் கொண்டு தண்ணீர் வடிந்தபோது ஜிவ்வென்று இழுபடுகிற மாதிரி உணர்ந்து கையை அவசரம் அவசரமாய்க் கோத்துக் கொண்டார்கள்.

"ஸாரி நரேன்...."

"எதுக்கு ஸாரி?"

"நான் ரொம்ப ரூடா நடந்துக்கிட்டேன் இல்லே?"

"எனக்கு ஸாரி வேணாம்...."

"பின்னே?"

"காம்பன்ஸேஷன்தான் வேணும்."

"ம்ஹூம்... இப்பக் கெடையாது. சுத்தி வர ஆளுங்க இருக்காங்க."

"பின்னே எப்ப?"

"உடனே கன்ஃபர்ம் பண்ணிக்கணுமா நரேன்?"

"எப்ப?"

"இருட்டட்டும்...."

"அந்தக் கதை ஏன் ஒனக்குப் பிடிக்கலே கிருத்தி?"

"வாங்க மணலுக்குப் போவோம்."

கரையோரமாகவே படகுகளையும் அதனருகில் அகத்தங்களையும் கண்டும் காணாமல் நடந்து வந்தார்கள். நரேந்திரன் தோளைப் பற்றிக் கொண்டு ஈர மணலில் கால் பள்ளம் பதிக்க நடந்து வந்த கிருத்திகா நின்றாள்.

"அந்தக் கதை ஏன் உனக்குப் பிடிக்கலே கிருத்தி?"

"மறுபடியும் ஆரம்பிச்சாச்சா அந்தக் கதையைப் பத்தி?"

"சொல்லேன். அப்படியே அனுபவத்தையெல்லாம் பிழிஞ்சு எடுத்து எழுதியிருந்தேனே..."

"அதான் பிடிக்கலே..."

"ஏன்?"

"உங்களுக்குத் தெரிஞ்சவங்க எத்தனை பேர் இருப்பாங்க?"

"அதனாலே?"

"அத்தனை பேருக்கும் நாம லவ் பண்றது தெரியணுமா நரேன்?"

"யாருக்குத் தெரியும்?"

"உங்களை நல்லாத் தெரிஞ்சவங்களுக்கெல்லாம் நல்லாத் தெரியுமில்ல... என்னை எக்ஸ்போஸ் பண்ற மாதிரி எழுதியிருந்திங்களே."

"என்னோட சொந்த அனுபவம்னு சொன்னாத்தானே கிருத்தி?"

"எழுத்த வச்சே கண்டு பிடிச்சுடுவாங்க."

"சரி... தெரிஞ்சுக் கிட்டுப்போவட்டுமே"

"நமக்கு இன்னும் கல்யாணம் ஆவலே, ஞாபகம் இருக்கட்டும்... ஊர்ல இருக்கறவனெல்லாம் நம்ம காதலைப் பத்தி எங்கப்பா

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்




**காம்ப்ளான்®**
**ஒன்றில்தான்**
**அவர்களுக்கு**
**அன்றாடம் தேவைப்படும்**
**23 ஊட்டச் சத்துக்கள்**
**அடங்கியுள்ளன.**

வளரும் குழந்தை-
களுக்கென்றே
சிறப்பான சில
தேவைகள்
உள்ளன—வளரும்
வயதிலே உடம்புக்குத்
தேவைப்படும்
மிகச் சிறந்த புரதம்,
22 மூலாதார
ஊட்டச் சத்துக்கள்
—அளிக்கிறது
காம்ப்ளான். மறவாதீர்கள்,
டாக்டர்களின் சிபாரிசு
பெற்ற, திட்டமிட்ட உணவு
காம்ப்ளான்.

**இலவசம்!** 32 பக்கங்கள் கொண்ட கைப் புத்தகம்.
''குடும்பத்திற்கான பரிபூரண ஊட்டச் சத்துணவு வழிகாட்டி''
50 பைசா தபால்தலை இணைத்து இம் முகவரிக்கு எழுதிப் பெறுக :
தபால் பை நம்பர் 19118, (Comp) G-78, பம்பாய் 400 025.

**திட்டமிட்ட பரிபூரண உணவு — காம்ப்ளான்®**

இட்டயும், அம்மா இட்டயும் போய்ச் சொன்னாப் போதும்... அக்காக்காரிக்குக் கல்யாணம் ஆவறத்துக்குள்ளேயே உனக்கு 'லவ்'வான்னு கேட்டுக் கொதறிடுவாங்க...''

''கிருத்தி... உன்னைப் புரிஞ்சுக்கவே முடியலே....''

''நான் உங்களுக்கு மட்டும்தான் நரேன். உங்களுக்காக நான் எது வேணு செய்வேன்னு அது உங்க சந்தோஷத்துக்காக... மத்தவங்களைச்சந்தோஷப்படுத்தற உங்க வியாபாரத்துக்காக இல்லே.... கொஞ்சம் நெஜத்தையும், கொஞ்சம் கற்பனையையும் சேர்த்து நீங்க எழுதிடறதெல்லாம் முழுக்க முழுக்க நெஜம்னு நெனைச்சுக்கிட்டு என்னை மேலேயும் கீழேயுமா மத்தவங்க பார்க்கறத்துக்காக இல்ல... நம்மளோட அந்தரங்கமெல்லாம் நமக்கு மட்டும்தான் சொந்தம். அதையெல்லாம் எழுதிறு என்னை எக்ஸ்போஸ் பண்ற மாதிரிதானே?''

கிருத்திகா மெல்ல விசும்ப ஆரம்பித்தாள்.

''ஏன் கிருத்தி... ப்ளீஸ்... ஸாரி கிருத்தி. ப்ளீஸ்... அழாதே கிருத்தி.. நான் செய்தது தப்புத்தான்... மகா தப்புதான். வேணு தோப்புக்கரணம் போடட்டுமா?''

அவள் தோளை அணைத்துக் குலுங்குகிற அவள் உடலை அவன் சமாதானப்படுத்த முனைந்தான்.

லேசாய் இருள் சூழ்ந்து கொண்டிருக்க, நடந்து கொண்டிருந்த அவள் சட்டென்று கழுத்தை வளைத்துமுகத்தை அவன் கன்னத்துக்கு நேராக வைத்துக் கண் சிமிட்டுகிற நேரத்தில் காம்பன்ஸேஷன் கொடுத்தாள்.

நரேந்திரன் தன் பேனாவை அன்றைக்கு மூடியதுதான்! பிறகு திறக்கவேயில்லை!






சாவுகூட
மங்கலமாகும்
ஞானபூமியில்
மணப் பந்தல்களில்
கருப்புத் தோரணங்கள்

போர்க்களங்களின்
ரத்த ஆறுகளே
வரலாறுகிவிட்ட
வீர பூமியில்–
சிவப்பாய் பூச்சாண்டிகள்.

பச்சை போர்த்த
ஜீவ பூமியில்–
வரப்புகளிலிருந்து
வெடித்துக் கிளம்பும்
பச்சை முண்டாசுகள்

காரணங் கேட்டு
ஆராய்ச்சி மணியடித்த
இருதயுக
ஞானப் பசுக்கள்
காணாமல் போய்விட்டன.

நான்கு சுவர்களுக்குள்
'ஜோல்னா' பை சகிதம்
புகைத்தபடி கூச்சலிடும்
வாயில்லா–
மானிடப் பூச்சிகளின்
நடமாட்டங்கள்

–மு. கோசலைராமன்

திரைஞானி

சினிமா

# சினிமா



# அம்மா

அன்று தண்ணீர்...தண்ணீர்
இன்று கண்ணீர்... கண்ணீர்
சரிதாவைத்தான் சொல்கிறேம்.

குடம் குடமாக அன்று தண்ணீரைச் சுமந்த மாதிரி இன்று கண்ணீரைச் சுமந்துள்ளார்.

தங்கை செய்த கொலைப் பழியைத் தன் மீது சுமந்து கொண்ட தியாகத்துக்கு ஒரு குடம்...

பெற்ற குழந்தையைப் பிரிந்து ஜெயிலுக்குப் போக நேர்ந்த பாவத்துக்காக ஒரு குடம்...

கணவனுக வேண்டியவனைக் கை நழுவிய பிறகு மீண்டும் சந்திக்க நேர்ந்த சோகத்திற்கு ஒரு குடம்...

அத்தனையும் நிறைவான, சுகமான, இதமான கண்ணீர்த் துளிகள். உணர்ச்சிகளைப் பிழிந்து காட்டிய கோடுகள். சரிதா ஓகே(ா)!

பிஞ்சு விமலின் மழலையும் முக பாவங்களும் நெஞ்சைக் கிள்ளிவிடுகின்றன. நடிப்பு அப்புறம்தான். அவனை, ''அம்மாவும் நீயே அப்பாவும் நீயே'' மாதிரி ஒரு பாட்டுப் பாட வைத்திருக்கலாமே என்று எண்ணத் தோன்றுகிறது.

பிரதாப் நடிப்பில் குறை வைக்கவில்லை.

அருந்ததியின் கணவருக்குக் குழந்தை மீது வெறுப்பு இருக்கலாம். ஆனல் அவர் குழந்தையை மழைச் சாரலில் கொண்டு போய்க் கிடத்தும் அளவு தூக்கிக் காட்டியிருப்பது மிகை.

வி.கே. ராமசாமி அண்ட் கோ அடிக்கும் கொட்டம் கொஞ்சம் மட்டம். (அண்ட் கோ: ராணி பத்மினி, மனேரமா, தும்பு, வனிதா)

குகநாதனின் கதையில் மனத்தை நெகிழ்விக்கும் நிகழ்ச்சிகளுக்குக் குறைவில்லை.

அம்மாவுக்கு வைத்தியம் செய்ய விமல் தன் அப்பாவிடமே திருடுவது—

கோலவிழி அம்மன் கோவிலில் தீச்சட்டி ஏந்திக் கையைச் சுடவைத்துக் கொள்வது—

கணவனின் நோய் தீர சரிதா அங்கப் பிரதட்சிணம் செய்வதுஇத்யாதி...இத்யாதி

'களத்தூர்கண்ணம்மா', 'அன்னை'போன்ற ஏ. வி. எம். படங்களின் சாயலில் கண்ணியம் கெடாமல் 'அம்மா'வை உருவாக்கியிருக்கிறர் டைரக்டர் ராஜசேகர்.

நல்ல கருத்துக்கள், உயர்ந்த லட்சியங்கள் சதையோடு இழைகின்றன.

புடவை அணிந்தவர்களைத் தன் பக்கம் ஈர்த்துக்கொண்டுள்ள நல்ல 'அம்மா!'



சிவாஜி 1 சிவாஜி 2 சிவாஜி 3



சிவாஜி 1

மெட்ராஸ் பிலிம் சொஸைடி 'அன்றும் இன்றும்' திரைப்பட வளர்ச்சி எப்படி உள்ளது என்பதை விவாதிக்க ஒரு கருத்தரங்கு நடத்தியது. அதற்கு முன்னோடியாக 'பராசக்தி' முதல் 'சங்கராபரணம்' வரை ஆறு படங்களைத் தேர்ந்தெடுத்துத் திரையிட்டுக் காட்டியது. முதல் நாள் 'பராசக்தி' படத்திற்கு சிவாஜி கணேசன் வந்திருந்தார்.

படத்தில் முதன் முதலாக சிவாஜி கணேசனை அறிமுகப்படுத்தும் காட்சியில் அவர் தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் எனக்கு வியப்பாக இருந்தது.

இன்றைக்கு 225 படங்களுக்கும் மேலாக நடித்துப் புகழ் பெற்ற நடிகர் ஒருவர் முதன் முதலாகத் தூங்கும் காட்சியில் அறிமுகமானது பற்றி சிவாஜி கணேசனிடமே கேட்டேன்.

''எனக்கு செண்டிமெண்ட்ஸ் கிடையாது. அதை ஏன் அப்படி எடுத்துக் கொள்கிறீர்கள்? தூங்கி எழுந்திருப்பதுதான் செண்டிமெண்ட் என்று வைத்துக் கொள்ளுங்களேன். படம் எடுத்தவர்களுக்கு அன்றே செண்டிமெண்ட்ஸ் இருந்தது. நான் காசைச் கண்டியபடியே 'சக்சஸ்' என்று வசனம் பேசும் காட்சியைத் தான் முதலில் எடுத்தார்கள். படமும் சக்சஸ். எனக்கும் சக்ஸஸ்தானே'' என்றார் அவர்.

சிவாஜி 2

செண்டிமெண்ட்ஸில் அன்றைக்கு நம்பிக்கை இருந்ததோ இல்லையோ இன்றைக்கு இருக்கிறது சிவாஜிக்கு.

சொந்தப் படத்துக்கு ஸ்டுடியோவில் பூஜை போடாமல் தமது வீட்டிலேயே போடுவது என்று ஒரு நியதி.

'சந்திப்பு' என்கிற அடுத்த படத்திற்கு பூஜை போட்டார். ஏராளமான தயாரிப்பாளர்கள், நட்சத்திரங்கள் வந்திருந்தார்கள். அத்தனை பேருக்கும் பங்களாவுக்கு முன்புறமாகப் போடப்பட்டிருந்த 'படுதா' பந்தலில் டிபன் காப்பி.

வந்தவர்களை ராம்குமாரும், பிரபுவும் விழுந்து விழுந்து உபசரித்தார்கள்.

அப்பாவாகவும் மகனாகவும் அவரே நடிக்கப் போகிறாராம். பிரபு தம்பி.

சிவாஜி 3

கற்பகம் ஸ்டுடியோவில் இருந்தவர்களெல்லாம் அன்று கண்ணைக் கசக்கிக்கொண்டு நின்றார்கள். வெளியே 'டர்ர்ர்ர் ஜோக்' அடித்துக்கொண்டிருந்த மனோரமாவும் வெண்ணிற ஆடை மூர்த்தியும் விழுந்தடித்துக் கொண்டு உள்ளே ஓடிவந்து வேடிக்கை பார்த்தார்கள். நாற்காலியில் அமர்ந்திருந்த சுஜாதா இரண்டு கைகளையும் விரித்து 'ஆஹா, அற்புதம்' என்று ரசித்தார். செட்டில் பின் டிராப் சைலன்ஸ். அப்படி என்னநடந்தது அங்கே?

குடுமி வைத்த நரசிம்மாச்சாரி, பெருமாள் படத்துக்கு முன்பு உட்கார்ந்து தமது மகனின் சாவைக் குறித்துப் புலம்பிக் கொண்டிருந்தார். புலம்பலா அது! எரிமலை அழுதது மாதிரி இருந்தது..

'ஸ்ரீனிவாசா! துஷ்டர்களை சம்ஹாரம் செய்ய நீ பூலோகத்திலே அவதாரம் எடுத்த மாதிரி என் மகனைக் கொன்றவனைப் பழி வாங்க நானும் சிம்ம அவதாரம்எடுக்கிறேன் பார்' என்று சிவாஜி 'பரீட்சைக்கு நேரமாச்சு' படத்துக்காக உணர்ச்சி பொங்கப் பேசியபோது நிஜமாகவே சிம்மாவதாரம் மாதிரி முகம் மாறியது.

பராசக்தி கதை கலைஞர் கருணாநிதி எழுதியது என்று பலர் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். திரைக் கதை வசனம் மட்டும்தான் அவர். அன்று படத்தின் டைட்டில் காட்டப் படும்பொழுது கதை: எம். எஸ். பாலசுந்தரம் எனப் போட்டிருந்தது.

# சினிமா

# ஏ

## அகரவரிசைப் பேட்டி:

## ஒய்.ஜி.மகேந்திரன்



### ஏர்-இந்தியா

மரியாதைக்குரிய ஸ்தாபனம். யாருக்கு பயப்பட்டாலும் பயப்படாவிட்டாலும் நான் இதற்குப் பயப்படுவேன். காரணம் சொன்னால் கேலி செய்யக் கூடாது. என் மனைவி சுதா டிராஃபிக் அஸிஸ்டெண்டாகப் பணியாற்றுவது இங்கேதான்.

### ஏக்-துஜே கேலியே:

மேனா தியேட்டரில் முதன் முறையாக நான் இப்படத்தைப் பார்த்தபொழுதே கமலுக்கு பம்பாயில் பெரிய வரவேற்பு காத்திருக்கிறது என்று சொல்லி விட்டேன். என் சோதிடம் பலித்து விட்டது.

### ஏர்-கண்டிஷன்

என்னைச் சோம்பேறியாக்கும் அறை. கலைவாணர் அரங்கில் 'தேடினேன் வந்தது' நாடகத்தை நான் நடத்தும்போது இது இல்லாமல் போய் ஒரு சின்ன தகராறே எழுந்தது.

### ஏ படம்

11ம் வகுப்புப் படித்துக் கொண்டிருந்த சமயம் அது. அடல்ட்ஸ் படம் என்பதால் வயதைக் கூட்டிக் காட்டுகிற மாதிரி டிரஸ் அணிந்து போனேன். 'லாஸ்ட் டிரைன் ஃப்ரம் கன்ஹில்' என்கிற படத்தைபார்க்க. மினர்வா தியேட்டருக்குப் போனபோது மானேஜர் காதில் விழும்படி நானும் என் நண்பனும் ஒரு குட்டி நாடகம் ஆடினோம். பலிக்கவில்லை. படம் பார்க்காமலே திருப்பி அனுப்பப் பட்டோம்.

### ஏற்காடு

ஒரே ஒரு முறை இங்கே நடிக்கப் போயிருக்கிறேன். 'கங்கா, யமுனா, காவேரி' என்கிற படம். அதில் எனக்கு ஜோடியாக நடித்தவர் யார் தெரியுமா? ஸ்ரீதேவி!

### ஏழை

என் மனத்தை உருக்கிய ஏழையை கீழ்ப்பாக்கம் மெர்ஸிஹோமில் பார்த்தேன். முகம்எல்லாம் வெந்து போயிருந்தது. யாரோ ஒருத்தி பெற்றுக் குப்பைத் தொட்டியில் கிடத்திவிட்ட குழந்தை மீது சூடாக வடித்த கஞ்சியை யாரோ கொட்டி விட்டார்களாம். அன்று முழுவதும் என் மனம் வேதனைப் பட்டது.

### ஏக்கம்

சிவாஜி கணேசனின் மகனாக யார் யாரோ நடித்திருக்கிறார்கள். அந்தப் பாக்கியம் எனக்குக் கிடைக்கவில்லையே என்னும் ஏக்கம் 'பரீட்சைக்கு நேரமாச்சு' படத்தில் தீர்ந்தது. 'பாசமலரில் சாவித்திரியை 'மடியில் கிடத்திக்கொண்டு கதறிய மாதிரி என்னையும் மடியில் வைத்துக் கதறுகிற காட்சி ஒன்று இப் படத்தில் இடம் பெற்றுள்ளது.

## கர்வம், கர்வம், கர்வம்

திருமால் பாற்கடலில் படுத்திருந்தார். அவர் உறங்கவில்லையாயினும் அவர் கண்கள் மூடியிருந்தன. அவர் தலைக்கு மேலே வெண் சாமரமும், குடையும் பெருமையுடன் வீற்றிருந்தன. அவை கர்வத்துடன் பகவானின் காலடிகளில்இருக்கும் பாதுகைகளை நோக்கிக் கூறின: ''என்ன பாதுகைகளே! எவ்வளவு உழைத்தாலும் நீங்கள் இருப்பது என்னவோ காலடிகளில்தான். உங்களைப் பார்த்தாலே பரிதாபமாக உள்ளது, பாவம்!''

தூங்குவது போல் படுத்திருந்த பகவான் தமக்குள் சிரித்துக் கொண்டார். கர்வத்துக்கு அடி கொடுக்க விரும்பினார். அதன் விளைவு?

இராமாவதாரத்தில் பகவான் காட்டில் சென்று வாசம் புரிந்த பதினான்கு ஆண்டு காலமும் பரதன் அப்பாதுகைகளையே வைத்து நாடாண்டு வந்தான். வெண்சாமரமும், குடையும் பாதுகைகளுக்குத் தொண்டுசெய்து வரவேண்டியதாயிற்று!

## கும்பிடு மூன்று வகை!

இரு கைகளையும் குவித்துக் கும்பிடுவதில் மூன்று வகை உண்டு. முதல் வகை இரு கைகளையும் நெஞ்சுக்கு நேராக வைத்துக் கும்பிடுவது. தனக்குச் சமமானவர்களை மட்டுமே இவ்வாறு கும்பிடுதல் வேண்டும். இரண்டாவது வகை இரு கைகளையும் முகத்திற்கு நேராகக் குவித்துக் கும்பிடுவது தன்னைவிட மேலான நிலையில் இருப்பவர்களையே இது போல் கும்பிட வேண்டும்.

மூன்றாவது வகை இரு கைகளையும் தலைக்கு மேல் தூக்கிக் குவித்துக் கும்பிடுவது. கடவுளை வணங்கும்போது மட்டுமே இவ்வாறு கும்பிட வேண்டும்.





## படித்த மேதையும் படிக்காத மாடும்!

கற்றறிந்த பண்டிதர் ஒருவர் எண்ணெய் வாங்குவதற்காக வாணியரின் வீட்டுக்குச் சென்றார். வீட்டுக்குள் எண்ணெய் ஊற்றிக் கொண்டிருக்கும்போது அந்த வாணியர் அடிக்கடி தன்வாயினால்'கெக்கே கெக்கே கெக்கே' என்று ஒலியெழுப்பிக் கொண்டிருந்தார். அதைப் பார்த்த பண்டிதர் வாணியரிடம் அதற்கான காரணம் என்னவென்று கேட்டார். அதற்கு வாணியர், வீட்டின் பின்புறமுள்ள செக்கில் மாடுகள் பூட்டப்பட்டிருப்பதாகவும் அவை சுற்றுவதை நிறுத்தும்போது மணிகளின் ஓசை நின்றுவிடும் என்றும் தாம் வாயால் அவ்வித ஒலி எழுப்பியதும் அவை மீண்டும் சுற்றத் தொடங்கி விடும் என்றும் கூறினார்.

பண்டிதர் வாணியரிடம் 'நீங்கள் வாயின் மூலம் ஓசை எழுப்பியதும் அது மீண்டும் சுற்றத் தொடங்கி விட்டது என்று எப்படி அறிவீர்கள்?' என்று கேட்க வாணியர், 'மாடுகளின் கழுத்தில் கட்டியுள்ள மணி ஓசை மீண்டும் ஒலிப்பதிலிருந்து தெரிந்து கொள்வேன்' என்றார்.

பண்டிதர் யோசித்தார். எப்படியும் அவரைத் தம் வாதத் திறமையால் வெல்ல நினைத்து, 'அது சரி, மாடுகள் செக்கை இழுக்காமலே கழுத்தை மட்டும் அசைத்து மணிகளின் ஓசையை எழுப்பி உங்களை ஏமாற்றினால் என்ன செய்வீர்கள்?' என்றார்.

அதற்கு அந்த வாணியர் அளித்த பதில்: 'நீங்கள் சொல்வது சரிதான். ஆனால், அவை மனிதர்களாகப் பிறக்கவில்லையே! ஆகையால் அவைகளுக்கு ஏமாற்றத் தெரியாது.!'

## பென்சிலா, மருமகளுக்கா, மூச்!

பிறந்த வீட்டில் செல்லமாக வளர்ந்த

## எப்போது வந்தது இந்த ஓட்டுரிமை!

'பாரதியின் கனவுகளை நனவாக்காத சமுதாயம் குற்றமுடையது' என்னும் தலைப்பில் வழக்காடு மன்றம் நடைபெற்றது. வழக்காடு மன்றத்தின் நடுவராக இரு கவி சிவம் பொறுப் பேற்றிருந்தார். வழக்கை மறுத்துப் பேசியவர், ''இன்றைக்குப் பிச்சைக்காரர்களுக்கும் கூட ஓட்டுரிமை வழங்கப் பட்டிருக்கிறது. இது பாரதியாரின் கனவு நனவானதை நமக்குக் காட்டவில்லையா?'' என்று ஆவேசமாகக் கேட்டார். உடனே நடுவர் இடைமறித்து, ''நமக்கு ஓட்டுரிமை விடுதலைக்குப் பின்புதான் கிடைத்துள்ளது. பிச்சைக்காரர்களுக்கு விடுதலைக்கு முன்பே அந்த உரிமை உண்டே'' என்றார்.

## முடித்து வைத்தார்!

ஒரு வீட்டுக்கு விருந்தினர் ஒருவர் வந்திருந்தார். சிற்றுண்டி சாப்பிட இலை முன்னால் வீட்டுக்காரரும் விருந்தாளியும் அமர்ந்தனர். இல்லத் தலைவி இலைகளில் இரண்டு தோசைகள் வீதம் பரிமாறினார்.

சிறிது நேரத்துக்குப் பிறகு மீண்டும் தட்டில் தோசைகளுடன் தனக்குப் பரிமாற வந்தவளை நோக்கி வீட்டுக்காரர் கூக்குரலிடத் தொடங்கினார்: ''ஏண்டி, இது என்ன தோசையா மண்ணா? இதை எவன் சாப்பிடுவான்? நாய்கூடச் சாப்பிடாது. கொண்டு போய்க் குப்பையிலே போடு. மனுஷன் சாப்பிடுவானா இதை. உன் தோசையோ லட்சணமோ, உன் தலையிலே போட்டுக்கோ!''

அடுத்து அவர் மனைவி விருந்தாளியிடம் பரிமாறச் சென்றபோது அவர் கையைக் கழுவிக் கொண்டு தம் சிற்றுண்டியை முடித்துக்கொண்டு விட்டார்!





ஒரு பெண் திருமணம் முடிந்து கணவன் வீட்டுக்குப் புறப்பட்டாள். புறப்படும்போது, அவள் தந்தை மகளிடம், 'உனக்கு உன் கணவன் வீட்டில் ஏதேனும் துன்பம் வந்தால் உடனே எனக்குக் கடிதம் போடு' என்றார். அருகிலிருந்த அவள் தாயாரோ கணவனைக் கடிந்து கொண்டாள். பிறகு மகளைப் பார்த்து, 'அப்பா சொன்னபடி செய்து விடாதே. நீ அப்படி எழுதும் கடிதத்தை அங்கு யாராவது படித்து விட்டால் என்ன செய்வது? நான் சொல்கிறபடி செய். நீ அங்கு மகிழ்ச்சியாக இருந்தால் நீ எழுதும் கடிதங்களைப் பேனாவால் எழுது. அங்கு நீ கஷ்டப்படுவதாக இருந்தால் அதைக் கடிதத்தில் குறிப்பிடாமல் பென்சிலால் எழுதினால் போதும் நாங்கள் புரிந்துகொள்வோம்' என்று யோசனை கூறி அனுப்பினாள்.

மகள் கணவன் வீட்டுக்குச் சென்ற சில நாட்களுக்குப் பின் அவளிடமிருந்து கடிதம் வந்தது. பேனாவால் எழுதப்பட்டுள்ள எழுத்துக்களைப் பார்த்தவுடன் இருவருக்கும் ஆறுதல். கடிதத்தைப் படித்தார்கள்.

'அன்புள்ள அப்பாவுக்கு,

இங்கு நான் நலமாயுள்ளேன். இங்கு என் கணவர் என்னை மிகவும் அன்பாக நடத்துகிறார். என் மாமியார் என் மீது அன்பை வாரிச் சொரிகிறார். என் நாத்தனார்மார்களோ என்னைத் தங்கள் சகோதரியாகவே பாவித்து அன்புடன் நடத்துகிறார்கள். அடிக்கடி என் கணவர் சினிமா, நாடகம், கண்காட்சி, பாட்டுக் கச்சேரி என்று அழைத்துச் செல்கிறார். இங்கு எனக்கு ஒரே ஒரு சிறிய குறை பென்சிலில் கடிதம் எழுத முடியவில்லையே என்பதுதான். அடுத்த முறை நீங்கள் யாராவது வரும்போது ஒருபென்சில் வாங்கிக் கொண்டு வரவும்.'

தொகுப்பு: ஜி. கிருஷ்ணமூர்த்தி

# உறவுக்கு என்ன தடை



**வா**னத்தில் நிலவைப் பூக்க விடாமல் குளிர் தன் விரிப்பை விரித்துக் கொண்டு வந்தது. ராம் மோகன் ஜன்னல் திரையை நன்றாக இழுத்து விட்டார். அறையை அளப்பது போன்ற நடை. பிறகு சுழல் நாற்காலியை ஒரு சுற்றுச் சுற்றினார். தொள தொளவென்று இரவு உடை. கதவைத் திறந்ததும் டார்ஜிலிங் பனி உள்ளே புக முயன்றது.

எதிர் அறை மனைவி சுலோசனாவுடையது. கதவைத் தட்டிவிட்டு உள்ளே போகலாம். ஆனால் உள்ளே போக விருப்பமில்லை. கதவைத் தாளிட்டுக் கொண்டார். இரவு விளக்கில் பெரிய கண்ணாடியில் நிழலாக விழுந்தது அவரது பிம்பம்.

அவருக்கு முதுமை வந்து விட்டதா?

வயது ஐம்பது என்றால் யாராவது நம்புவார்களா?

லோசனா அவருக்கு முதுமை வந்துவிட்டது என்று நினைக்கிறாளோ? — இந்த நினைப்பே கசந்தது. மேஜை மீது அவரும் லோசனாவும் சேர்ந்து எடுத்துக் கொண்ட புகைப் படம். அவர் அருகில் அவள் நிற்பது பொருத்தமாக இல்லையோ? அருகில் நிற்கும்பொழுது அவருடைய மகளைப் போல இருக்கிறாளோ?

அவருக்கும் அவளுக்கும் இருபது வயது வித்தியாசம். இன்னும் துள்ளும் மான் போல் தான் நடை. உணவில் கட்டுப்பாடு. முப்பது வயது என்று இன்னும் யாரும் சொல்ல முடியாத தோற்றம். நாகரிகமும், அலங்காரமும் எழில் பதுமையாக ஆக்கி விட்டிருந்தன.

முதல் மனைவியை இழந்து — கையில் ஒரு பெண் குழந்தையுடன் நின்றபொழுது மனதில் வைராக்கியம் தோன்றியது. என்னவோ உண்மை. மகளின் வாழ்க்கை தன் கையில் சுமையாகக் கனத்தபொழுது — அதுதான் இனிமேல் தன்னுடைய வாழ்க்கையும் — 'இப்பிறவியில் இரு மாதரைச் சிந்தையிலும் தீண்டேன்' என்ற ராமனின் கொள்கை போல மனத்துக்குள் ஒரு வைராக்கிய வெறி பிறந்தது.

முதல் கல்யாணமே வயதைக் கடந்து விட்ட கல்யாணம். வயதான அம்மாவின் கண்ணீர். குழந்தை அம்மாவிடம் வளர்ந்தான்.

அம்மா போன பின்பு கல்லூரி ஹாஸ்டலில் தங்கி விட்டாள். வீட்டில் பெண் துணை இல்லாத காரணத்தால் அதுதான் வசதியாக இருந்தது. அடிக்கடி போய்ப் பார்த்து விட்டு வருவார்.

பிஸினஸ் லைஃபில் அள்ளிக் குவித்த பணம் செலவு செய்தும் மீண்டும் மீண்டும் குவிந்தது. பெண் சுகம் தேவை என்று உடல் அறிவிக்கவில்லை. பணம்....பணம்... அதுதான் வாழ்க்கை. மகளுக்கு ஒரு வாழ்க்கை தேவை என்பதைக்கூட மறக்க வைக்கும் பிஸினஸ் லைஃப்.

ஆனால் மூன்றாண்டுகளுக்கு முன்பு லோசனா அவரை வளைத்துக் கொண்டாள். கிளப்பில் ஏற்பட்ட சந்திப்பு. தனிமையில் உட்கார்ந்திருந்த அவரை அவள் அழைத்தாள். நளினமான வேண்டுகோள்:

''கேர் டு ஜாயின் மீ?'' என்று மெல்லிய குரலில் காதருகில் கேட்டாள்.

ஷாம்பேயினில் மிதந்த லெமன் துண்டுகள்! ஒளி மங்கிய ஹாலில் நிழல்களாக ஆடும் உருவங்கள். துள்ளித் திரிய வைக்கும் இசை! காதருகில் முணு முணுத்த குரலைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தார். பொன் கலர் சல்வார் கம்மீஸில் தேவதையாக நின்றாள்.

மண வாழ்க்கையை மறந்துவிட்ட பின்பு அதை நினைவுபடுத்த வந்த மென்மைக்கு

அவர் மதிப்புக் கொடுத்துத்தான் அவளுடன் ஆடினார். பல ஆண்டுகளுக்குப் பின்பு வாழ்க்கை வாழ்ந்து மகிழ என்று எண்ணும் உல்லாசம். இவளை ஏற்றுக்கொண்டால் என்ன?

ஒரு நாள் அவர் கிளப்புக்குப் போகவில்லை. உடல் அனலாகக் கொதித்தது. அந்த இளம் பெண்ணின் துணை தனக்குத் தேவை. அவரைக் காணாத நிலையில் அவளாகவே வந்துவிட்டாள். அவருடைய பெரிய வீட்டைக் கண்டு மிரண்டாள்.

''பயப்படாதே. ஐ வாண்ட் யுவர் கம்பெனி த்ரு அவுட் மை லைஃப்'' என்று அவன் கரத்தைப் பற்றிக் கொண்டதும் — அவளால் நம்பவே முடியவில்லை.

''பிஸினஸ் லைஃபில் ஈடுபட்டு முதுமைக் கோடிட்ட உடல் தளர்ச்சியைப் பற்றி நினைத்துத் தன்னை ஒதுக்கி விடுவாளா? பதில் சொல்லு லோச்ச.''

நிமிர்ந்தவளின் கண்களில் கண்ணீர் கரை கட்டி நின்றது. அவர் பதறினார். நான் தப்பா ஏதாவது கேட்டு விட்டேனா?



''இல்லே; என்னைப் பற்றி நீங்கள் தெரிந்துக்க வேண்டாமா?''

''சொல்லு கேட்கிறேன்; வித் பிளஷர்.''

''அதிர்ச்சி அடையாதீங்க. உங்க அந்தஸ்துக்கு நான் லாயக்கில்லே.''

அவர் தம் தாடையைத் தடவிக் கொண்டார். ''முடிந்து போனதைப் பற்றி நான் கவலைப்படறவன் இல்லே. இன்னிக்கு என்ன நடக்கும்? இதுதான் என் சிந்தனை. அதுக்குத் தான் முயற்சி பண்ணுவேன். நான் பக்கா பிஸினஸ்மேன். லாபம்தான் குறி. இன்னிலேருந்து நீ என் மனைவி. பழைய வாழ்க்கையைப் பற்றி நான் கேட்க மாட்டேன். நீயும் பேசாதே.''

மூன்று ஆண்டுகளாக இந்த உறவில் விரிசல் வரவில்லே. இரண்டு மாதமாக அவரது மனத்தில் ஏன் இந்தத் தளர்ச்சி! அவருடைய இந்த மணம் மகளுக்குக் கூடத் தெரியாது. அவளை விடுமுறையில் கூட வரவழைத்துக் கொள்ளவில்லே. அவர் போய் மகளுடன் தங்கிவிட்டு வந்தார்.

அதுகூட லோசனுவுக்குக் குறைதான்.

இரண்டு மாதங்களுக்கு முன்புதான் ரவி அவர்களுக்கு அறிமுகமானுன். மலே ஏறும் பயிற்சியில் ஈடுபடுவதற்காக அங்கு வந்திருக்கும் இளைஞன்.

கட்டுடல். சுருண்ட முடி நெற்றியில் விழுந்தது. 'ஸீ மீ' என்ற வார்த்தை பனியனில் குறுக்கே விழுந்து — நெஞ்சத் திடலேயும் செழித்த தோளேயும் பார்க்க வைத்தது. கலகலவென்று நகைத்தபடி பேசும் சங்கீதக் குரல். அந்தப் பனியில் ராம் மோஹனுல் சரளமாகப் பேச முடியவில்லே.

லோசனு கலகலவென்று பேசினுள்.

அதுவே அவருக்கு எப்படியோ இருந்தது. பசிய கொடி பட்ட மரத்தில் படர்ந்து விட்டதோ? தலேயைச் சுற்றிக் கட்டிய துணி, சிவந்த ஸ்வெட்டர், கையை மறைக்கும் உறைகள் — முகம் மட்டும் பூத்த ரோஜாப் பூவாக இருக்கிறதே? பனிக்குச் சில்லிட்ட கன்னங்கள் பளிங்காக ஒளிர... இவளின் இளமைத் துள்ளலுக்கு ஈடு கொடுக்கும் வயதா தனக்கு?

நிலவை மறைக்கும் முகிலாக முன்னுச்சி மயிர்கள் தலே நீட்டின. ரவி 'ஸீ மீ' பனியன் உடலேக் கவ்வ, திண்ணென்ற தோள்கள் தெறிக்க வந்தான்.

''ஸ்கேட்டிங் போகிறேன். வரீங்களா?'' என்று அழைத்தான்.

ராம் மோஹன் ஒதுங்கிக் கொண்டார். ''எனக்குக் கொஞ்சம் உடம்பு சரியில்லே.''

லோசனு சின்னக் குழந்தையாக மாறிப் போனுள். ''நான் வரேன் மிஸ்டர் ரவி. எனக்கு ஸ்கேட்டிங்னு ரொம்பப் பிடிக்கும். ரெண்டு தடவை பரிசு வாங்கியிருக்கேனுக்கும்'' என்ருள்.

ரவி தயக்கத்துடன் ராம் மோகனேப் பார்த்தான். அவரோ பைப் பற்ற வைத்துக் கொள்வதில் கவனமாக இருந்தார். இதிலிருந்தே அவர் மனம் சலனப்படத்தொடங்கி விட்டது. பழக்க தோஷமோ, தொழிலின் விட்ட குறையோ — லோசனுவைப் பற்றிக் கொண்டு விட்டதோ!

நினைப்பே கசந்தது. அதனுல்தான் மனைவியின் அறைக்குள் செல்லும் விருப்பம் இல்லே. தன் அறைக்குள் நுழைந்து ஒரு காம்போஸ் மாத்திரையை விழுங்கினுர்.

லோசனு ரவியை விரும்பினுல் செய்ய வேண்டியது என்ன? கௌரவமாக ஒதுங்கிக் கொள்வதுதான் நல்லது. ரசாபாசமாக எதுவும் செய்யக் கூடாது. வயதிற்கேற்ற விவேகத்துடன் நடந்து கொள்ள வேண்டும். இது முடியுமா?

**ம**றுநாள் காலே. உணவு மேஜை மீது வந்து உட்கார்ந்த அவரைக் கண்டு திடுக்கிட்டாள் லோசனு. நெற்றி மயிர்கள் சிலும்பி நிற்க, கண்கள் சிவந்து பைகட்டி... இவருக்கு என்ன வந்தது?

''என் டியர், ராத்திரிபூரா தூங்கலேயா?''

தேநீர்க் கோப்பையை அவர் முன்பு நகர்த்தியவள், எழுந்து வந்து நெற்றியில் கையை வைத்துப் பார்த்தாள். அந்த ஸ்பரிசம் அவருக்கு ஒருவித ஆறுதலேயும், இதை இழந்து விடுவோமோ என்ற ஏக்கத்தையும் கிளறியது. பணியாள் தந்தி ஒன்றை அவர் முன் வைத்துவிட்டுப் போனுன்.

தந்தியைப் பார்த்தவர் திடுக்கிட்டுப் போய் அவளேப் பார்த்தார். அவரது மகள் ரஞ்சனி வரப்போவதாகத் தந்தி கொடுத்திருந்தாள்.

''ரஞ்சனி வரப்போகிருளாம். நான் உன்னைப் பற்றி எதுவும் சொல்லவே இல்லே.'' தடுமாறினுர்.

''நான்தான் எழுதினேன்'' என்ருள் லோசனு இளம் புன்னகையுடன்.

''இப்ப எதுக்குத் திமிர்னு? அவள் என்னைப் பத்தி என்ன நினைப்பா?''

''ஒண்ணும் நினைக்க மாட்டா. வரட்டும் ஜாம் ஜாம்னு அவள் கல்யாணத்தைப் பண்ணுவோம்.''

''கல்யாணமா? மாப்பிள்ளே யாரு?''

''நம்ம ரவிதான். எனக்குப் பிடிச்சிருக்கு. உங்களுக்கும் அவனைப் பிடிச்சிருக்குன்னு எனக்குத் தெரியும். ரஞ்சனியும் ரவியும் பார்த்துக் கொண்டா 'டும்டும்'தான். எத்தனை நாள்தான் நாம் பொறுப்பைச் சுமந்து கொண்டே இருப்பதாம்? குழந்தைக்கு வயசாகல்லே? அவளாக வந்தா எனக்குக் கல்யாணம் பண்ணிவைன்னு கேட்பாள்?''

செல்லமாக அவரது கன்னத்தை அவள் இழைத்தாள்.

முருகனின் ஆறுபடை வீடுகளும் முதல் ஐந்து படை வீடுகளிலும் நிகழ்ந்ததாகச் சொல்லப் படும் அற்புதங்களேயும் அனேவரும் அறிவர். ஆனுல் பழமுதிர்ச் சோலேயில் என்ன நிகழ்ந்தது? அத்தலத்திற்கு பழமுதிர்ச்சோலே என பெயர் வரக் காரணம் யாது? நான் பழமுதிர்ச் சோலே சென்றிருந்தபோது அங்கு பழக்கடை வைத்திருக்கும் ஓர் அன்பர், ''இங்குதான், முருகன் ஔவைப்பாட்டிக்கு ''சுட்ட பழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா?'' என வினவி, நாவற் பழங்களே உதிர்த்தார். முருகன் பழங்களே உதிர்த்ததால் இச்சோலே பழம் உதிர்ச் சோலே எனப் பெயர் பெற்றது'' என்ருர்.

-மயில்வாகனன்

# இதுவும் ஒரு வகையில் நன்றி தான்

ராமதுரை பறந்தார். நேரம் ஆக. ஆக அவர் தவிப்பு அதிகரித்தது.

''ஆச்சா? சரியா நாலு மணிக்கு வந்துடுவா! அதுக்குள்ளே எல்லாம் தயாரா இருக்கணும்!'' என்று மனைவியையும் மகளையும் விரட்டினார்.

''என்னப்பா நீ? இப்பத்தான் புதுசா- தயார் செய்யறோமா? ஏற்கனவே பத்துத் தடவை நடந்த ரிகர்சல்தானே?'' — விளையாட்டாகக் கேட்க எண்ணினாலும் குரலில் இழையோடிய வேதனையை மறைக்க முடியவில்லை பத்மாவால்.

அதை உணர்ந்த ராமதுரையும் எதுவும் பேசாமல் வாசலுக்குச் சென்று அவர்கள் வருகிறார்களா என்று பார்வையை ஓட்டினார்.

இத்தனைக்கும் பெரிய சம்சாரியும் இல்லை, ஒரே பெண்தான். பி. ஏ. படித்துவிட்டு வேலைக்கு அப்ளிகேஷன் போட்டுக் கொண்டிருந்தாள் பத்மா.

வேலை கிடைத்தால் தேவலை, கல்யாணம் குதிர்த்தால் கல்யாணம் என்று இரண்டு பக்கமும் முயற்சியில் இறங்கினார் அப்பா.

வேலையும் கிடைத்தபாடில்லை. போன இண்டர்வியூக்கள் ''சாரி'' சொல்லிவிட்டன.

பெண் பார்க்க வந்தவர்களும் ''இவ்வளவுதான் செய்வேளா? எங்க திட்டத்துக்கு இது போறாதே?'' என்று கையை விரித்துவிட்டுப் போய்விட்டார்கள்.

ராமதுரை தவியாய்த் தவித்தார்.





ரிடயர்ட் ஆகிக் கைக்கு வந்த பிராவிடண்ட் பண்ட் பணம் கரைவதற்குள் கல்யாணம் ஆகிவிட்டால் தேவலையே என்று கவலைப்பட்டார். பத்மா கிட்டத்தட்ட விரக்தியின் எல்லையில் இருந்தாள்.

ஒவ்வொரு தடவையும் அடக்க ஒடுக்கமாக வந்து பேர் பேராகக் காலில் விழுந்து, 'பாடத் தெரியுமோ'வுக்கு 'பாவயாமி' பாடி, சினிமா தியேட்டரில், பஸ் ஸ்டாண்டில் எவனாவது முறைத்தால் செருப்பைக் கழற்றுபவள், இப்பொழுது முன் பின் தெரியாதவன் முன்னிலையில் அவன் அணுஅணுவாக ரசித்துப் பார்ப்பதற்காகவே உட்கார்ந்து, திரும்பி, நடந்து, பேசி, சிரித்து உபசரித்து... போதும் இந்த அவமானம்.

பிறகு இன்னொரு நாள் இன்னொரு கும்பல் வந்து உட்கார்ந்து திரும்பவும் புதிய இளைஞனின் பார்வைக் கணையைப் பொறுமையாகச் சகித்து, காலில் விழுந்து, பாடி, உட்கார்ந்து, எழுந்து....

பத்மா தீர்மானமாகச் சொல்லிவிட்டாள்.

''அப்பா! இதோட சரி. இந்தத் தடவை அவனுக்கு என்னைப் பிடிச்சு, கல்யாணம் ஆனா ஆகட்டும். இல்லாட்டா தீவிரமா முயற்சி செஞ்சு ஏதாவது வேலை தேடிக்கிறேன். இனி நீங்க இந்த மாதிரி ஓடி ஓடி வரன் தேடி, பெண்ணைப் பெத்த தோஷத்துக்குக் கூனிக் குறுகி வளைய வேண்டாம்.''

இந்தக் காலப் பெண் புரட்சியாக முழங்கினாள்.

வயதான பெண்மை மறுத்தது.

''நன்னா இருக்குடீ நீ சொல்றது? பெண்ணுக்குக் கல்யாணம் ஆறதுன்னா சும்மாவா?'' என்று கண்டித்தாள் லட்சுமி.

ராமதுரை இரண்டு பேருக்குமே பதில் சொல்லாமல் மௌனமாக இருந்துவிட்டார்.

பானுமதி ராஜகோபாலன்

சர்ரென்று வந்து நின்ற டாக்சி அவர் கவனத்தைக் கலைத்தது.

''நீங்கதானே மிஸ்டர் ராமதுரை?''

டாக்சியிலிருந்து இறங்கிய பெரியவர் கேட்டார்.

ராமதுரை பரபரப்படைந்தார்.

''ஆமாம்.... ஆமாம்....நீங்க வந்து....''

''எஸ்... நான்தான் கணபதி...'' என்று வந்தவர் கூறியதும் ராமதுரை முகம் மலர, ''வாங்கோ... வாங்கோ....!'' என்றபடி உள்ளே விரைந்தார்.

கணபதி,சீதாவும் ராகவனும் பின்தொடர உள்ளே வந்தார். சட்டென ஒரு களை ஹாலில் பரவியது.

''உட்காருங்கோ...'' என்று சோபாவில் இல்லாத தூசியை ராமதுரை தட்டிவிட்டு நிமிர, கணபதி ராகவனுடன் உட்கார்ந்தார்.

புடவைத் தலைப்பால் தோளை மூடியபடி வந்த லக்ஷ்மி, ''வாங்கோ மாமி!'' என்று சீதாவைப் புன்னகையுடன் வரவேற்று ஓரமாகப் போட்டிருந்த பட்டுப் பாயில் உட்காரச் சொல்லி உபசரித்தாள்.

பழக்க தோஷத்தால் அடுத்த கேள்வி இயல்பாக வெளிவந்தது ராமதுரையிடமிருந்து.

''வந்து... முதல்லே பெண்ணைப் பார்த்துடறேளா, இல்லாட்டா டிபன் எடுத்துக்கறேளா?'' என்றார் ராமதுரை.

''இருக்கட்டும். அதுக்கு முன்னாடி ஒரு கேள்விகேட்கணும்.இப்படி உட்காருங்கோ'' என்று கணபதி தம் அருகில் கை காட்டினார்.

'உம்மால் எத்தனை செய்ய முடியும்!' என்று கேட்கத்தான் என்று நினைத்தபடி மெல்ல உட்கார்ந்தார் ராமதுரை.

''உமக்குப் பூர்வீகம் எது?''

''காரைக்கால் பக்கம் அம்பகரத்தூர்.''

''அம்பகரத்தூரிலே பண்ணையார் சிவராமன் பிள்ளைதானே நீங்க? உங்க கூடப் படிச்ச கணபதியை நினைவில்லையோ? கோவில் பரிசாரகர் பிள்ளை?''

''அடடே.... கணபதியா நீ.... நீங்க? நினைவே இல்லை. அடையாளமே மாறிப் போச்சே?'' என்று வியந்தார்.




வேலை நேரத்தில் என்ன செய்கிறார்கள்?

1979-80ல் மத்திய அரசு ஊழியர்களுக்கு ரூ80 கோடி அளவு ஓவர்டைம் படி தரப்பட்டிருக்கிறது. - தேனிமுருகேசன்

''நீன்னு சொல்லிட்டு அப்புறம் ஏன் நீங்கன்னு சொல்றே? நடுவிலே பழக்கம் விட்டுப் போனாலும் நாம சினேகிதர்கள்தானே?'' என்று சிரித்தார் கணபதி.

அப்புறம் பேச்சு பழைய நினைவுகளில் தாவியது. தந்தைக்குப் பிறகு சொத்து சுகம் கரைந்தது. ராமதுரை ஆசிரியராகி ஓய்வு பெற்றது. கணபதி கஷ்டப்பட்டுப் படித்து முடித்து.சின்ன அளவில் ஓர்க்ஷாப் தொடங்கி இப்போது பெரிய அளவில் விஸ்தரித்திருப்பது...

''ராமதுரை, நீ மறந்துட்டே. ஆனா நான் மறக்கவே மாட்டேன். எத்தனை நாள் எனக்காகச் சேர்த்து நீ சாப்பாடு கொண்டு வந்திருக்கே? பரீட்சைக்குப் பணம் கட்டத் திண்டாடினப்போ நீதானே எனக்காகப் பணமும் கட்டினே? இந்த அளவு முன்னேற நீதானே காரணம்?''நெகிழ்ந்தார் கணபதி.

ராமதுரைக்கும் மனம் கசிந்தது.

''ராமதுரை! உனக்கு நான் நன்றிக் கடன் பட்டிருக்கேன். அதாவது ஒரு வகையிலே உனக்கு நான் ஒத்தாசை செஞ்சே தீரணும். இல்லாட்டா என் மனம் சமாதானமடையாது. உனக்குப் பட்டம் வாங்கின பையன் இருந்தா என் கிட்டே அனுப்பி வை. நிச்சயமா நல்ல வேலையா அவனுக்குப் போட்டுத் தரேன்'' என்றார் கணபதி உணர்ச்சிவசப்பட்டு.

''அத்தனை கொடுப்பினை இல்லையே கணபதி! ஒரே பெண்தான். இவ கல்யாணம் முடிஞ்சாலே பாதிபாரம் எறங்கின மாதிரி.'' என்று ராமதுரை எழுந்தார்.

அடுத்த சில நிமிடங்களுக்கு அந்த ஹால் நெய்யும்,ஏலமும், வெங்காயமுமாக மணக்க, கேலியும், பேச்சும் சிரிப்பும் சூழ்நிலையைக் கலகலப்பாக்கின.

''நாம பாட்டுக்குப் பேசறதும்சாப்பிடறதுமாக இருக்கோம். என் பிள்ளையானா இன்னும் பெண்ணைப் பார்க்கலையேன்னு தவிக்கிறான்'' என்று கணபதி வேடிக்கையாகக் கூற,

ராமதுரை சிரித்தபடி, ''லக்ஷ்மி, பத்மாவை அழைச்சுண்டு வா!'' என்றார்.

பத்மா சிம்பிளான அலங்காரத்திலும் எடுத்து வைத்த சுடராக அழகாக ஒளி வீசியபடி பெரியவர்களை நமஸ்காரம் செய்தாள்.

இந்த முறை வந்தவர்கள் பழைய நண்பர்களாக இருந்ததுடன் அவர்களின் வெளிப்படையான பேச்சு அவள் மனத்துக்குப் புதிய நம்பிக்கையைத் தோற்றுவித்தது.

ராமதுரையும் லட்சுமியும் கல்யாணம் நிச்சயமாகிவிட்டதாகவே உணர்ந்தனர்.

''பொண்ணை என் பிள்ளைக்குப் பிடிச்சிருக்கான்னு கேட்கவே வேண்டாம். பார் அவன் முகத்தை. இத்தனை நேரம் இருபத்தஞ்சு வாட் பல்ப் மாதிரி அழுது வழிஞ்சவன் இப்போ பெண்ணைப் பார்த்ததும் நூறு வாட்டாக் கண்ணைக் கூசவைக்கிறானே அதிலேயே தெரியலையா?'' என்று சிரித்தார் கணபதி. ராமதுரையும் சேர்ந்து கொண்டார்.

பத்மா வெட்கத்துடன் உள்ளே ஓடினாள்.

''சரி.. அப்புறம் மேற்கொண்டு பேசலாமே...'' என்று ஆரம்பித்தார் கணபதி.

# புதிய
# கோல்கேட் ஃப்ளோரிகார்ட் டூத்பேஸ்ட்




குழந்தைகளுடைய பற்களின் மென்மையான எனாமல் எளிதில் துவாரங்களுக்கும் சிதைவுக்கும் உள்ளாகிறது. பெரியவர்களுக்கும் பற்சிதைவுக்கு எதிராக பாதுகாப்பு தேவை.

புதிய ஃப்ளோரிகார்ட் டூத் பேஸ்ட் பல் துவாரங்களுக்கும், பற்சிதைவுக்கும் எதிராக உங்கள் குடும்பத்தினருக்கு நிச்சயமான பாதுகாப்பைத் தருகிறது. துவாரங்களையும், பற்சிதைவையும் உண்டாக்கும் வாய் அமிலங்களுக்கு எதிராகப் பற்களை உறுதிப்படுத்துவதற்கென பல் எனாமலுடன் இணைந்து செயல்படும் விசேஷ கோல்கேட் எம்.எஃப்.பி ஃப்ளோரைட் அதில் உள்ளது.

கோல்கேட் ஃப்ளோரிகார்ட் புன்னகைக்கும் புதுக்களை கொண்டு, உங்கள் குடும்பத்திற்கு இன்றே வாங்குவீர்.




உலகெங்கும் உள்ள ஆராய்ச்சிசாலைகளில் சோதிக்கப்பட்டுள்ள எம்.எஃப்.பி ஃப்ளோரைட் துவாரங்களுக்கும், சிதைவுக்கும் எதிராகப் பற்களை உறுதிப்படுத்துகிறது என்பது மருத்துவ ரீதியாக நிரூபணமாகியுள்ளது. கோல்கேட்டின் தீவிர ஆராய்ச்சி மட்டுமே இந்த தனிப்பட்ட எம்.எஃப்.பி பார்முலாவை உங்களுக்கு வழங்க முடியும்.



**ஃப்ளோரிகார்டில் உள்ள எம்**
**எ.ஃப்.பி ஃப்ளோரைட் எனாமலுடன் இணைந்து துவாரங்களுக்கும், சிதைவுக்கும் எதிராக உங்கள் பற்களை உறுதிப்படுத்துகிறது.**

தமிழ்நாடு, கேரள மாநிலங்களிலும், கர்நாடகத்தில் குறிப்பிட்ட சில மார்க்கெட்டுகளிலும் இப்போது கிடைக்கும்.

CFT.G.3 TM

''நீதான் சொல்'' என்றார் ராமதுரை.

''இவன் என் மூன்றாவது பிள்ளை. உனக்குத் தான் தெரிஞ்சிருக்குமே டாக்டரா இருக்கான். என் முதல் இரண்டு பிள்ளைகளும் கூட டாக்டராகத்தான் இருக்கா. அவாளுக்குக் கல்யாணம் ஆனப்போ சம்பந்தியா வந்தவா பொண்ணுக்கு வைரத் தோடு, வைர மூக்குத்தி, முப்பது பவுன் நகை, வெள்ளிப் பாத்திரம் பத்தாயிரம்; தவிர எவர்சில்வர், பர்னிச்சர், ஸ்கூட்டர். அப்புறம் கையிலே பத்தாயிரம் கொடுத்தா...''

ராமதுரை ஸ்தம்பித்து நின்றார். இவற்றில் பத்தில் ஒரு பங்குகூடத் தன்னால் தர முடியாதே....

''சாரி கணபதி... உன் இட்டம் ரொம்பப் பெரிசா இருக்கே. என்னாலே தாங்க முடியுமா?'' ராமதுரை மெதுவாகக் கூறினார்.

''யு நோ ராமதுரை! என் பெரிய பிள்ளைகளுக்கு என்ன செஞ்சேனோ அப்படியேதான் இவனுக்கும் செய்யணும். கொஞ்சம் குறைஞ்சாலும் இவனுக்கு வரவ, பெரிய நாட்டுப் பெண்கள் முன்னால் இளக்காரமாப் போயிடுவா. அதோட இவனுக்கும் குறை இருக்கப்படாது பாரு. நம்ம அண்ணா ரெண்டு பேரும் நிறையச்சீர் வாங்கியிருக்கா. நாம மட்டும் குறைவா வாங்கணுமா? அவாளை விட நாம எந்த விதத்திலே மட்டம்னு அவன் வருத்தப்படக் கூடாது பார். அதனால நான் என் பெரிய நாட்டுப் பெண்களுக்குச் செய்த சீர் வகைகளை லிஸ்ட் போட்டுத் தரேன். அதே போல் கொடுக்க முடியுமான்னு டிரை பண்ணு....''

''இல்லேப்பா... நிச்சயமா என்னாலே அந்த அளவுக்குக் கொடுக்கவே முடியாது.''

''ஸோ...டிராப் இட்....'' கணபதி எழுந்தார். பிள்ளை கூடவே எழுந்தான்.

நகைச்சுவைப் படம் முடிந்த காலி தியேட்டரைப் போல் கல்லென்ற அதிகமான மௌனம் பரவியது அங்கே.

''மே ஐ கம் இன் சார்?''

''எஸ்... கம் இன் பிளீஸ்!''

மூக்குக் கண்ணாடியைச் சரிசெய்தபடி நிமிர்ந்த கணபதி அதிர்ந்தார்.

முதல் கைதி: உனக்கு எவ்வளவு வருஷம் தண்டனை?

2ம் கைதி: கற்பழிப்புக்கு கொலைகுற்றத்துக்கு கொள்ளை அடித்ததற்கு எல்லாமா சேர்த்து மொத்தம் 63 வருஷம்! உனக்கு?

முதல் கைதி: ஹூம்.... நீ அதிர்ஷ்டக்காரன், எனக்கு முன்னாடியே விடுதலை ஆகி வெளியே போயிடுவே!

- ஆ. பானுமதி



''நீயா! பத்மா! எங்கே வந்தே? அப்பா ஏதாவது சொல்லி அனுப்பினாரா?''

''இல்லே சார். உங்க கம்பெனிக்கு கிளார்க் வேணும்னு நீங்க பேப்பர்லே விளம்பரம் போட்டேளே. அப்போ அப்ளிகேஷன் அனுப்பினேன். அதுக்கு இன்டர்வியூ கார்டு அனுப்பினேள். அதிலே என்னைக் குறிப்பாக் கவனிச்சிருக்க மாட்டேள். இல்லாட்டா உங்க கிழே வேலை பார்க்கிற மானேஜர் அந்த டிபார்ட்மென்டைக் கவனிச்சிருப்பார். இதோ... என்னோட சர்டிபிகேட்...பார்த்துட்டு செலக்ட்பண்ணுங்கோ''

பத்மா பைலை அவர் முன் வைத்தாள்.

கணபதி எச்சிலை விழுங்கினார்.

''என்னம்மா இது... நீ எங்கிட்டே வேலைக்கு வரப் போறியா...உங்கப்பாவுக்குத் தெரியுமா?''

''இன்டர்வியூவுக்குப் போறேன்னுதான் தெரியும். அது உங்க கம்பெனின்னு தெரியாது... சார்... இப்போ கண்டிப்பா எனக்கு ஒரு வேலை வேணும். அப்பாவோட பென்ஷன் பணம் போரும பிராவிடண்ட் ஃபண்ட்பணத்தையும்செலவுக்கு எடுத்துண்டு வரோம்.... அது முழுசாத் தீர்ந்துடறதுக்கு முன்னே எனக்குக் கல்யாணம் ஆகணுமேன்னு அப்பா ரொம்பக் கவலைப்படறார். அடிக்கடி நெஞ்சு வலிவேற வரது அவருக்கு. எனக்குப் பயமா இருக்கு. இந்த வேலை கெடைச்சாக் குடும்பச் செலவுக்கு உதவும். அதோட, சீட்டுக் கட்டி நகை, பணம்னு வாங்கிச் சேர்த்தாலும் நல்லது.'' மடமடவெனப் பேசினாள் பத்மா.

கணபதி அவளைக் கூர்ந்து கவனித்தார்.

''என்னமோ நான் உனக்கு வேலை கொடுத்துட்ட மாதிரி வந்து திட்டம் எல்லாம் போடறியே?''

''நீங்க எனக்கு நிச்சயம் வேலை கொடுப்பேள் சார்.''

''எப்படிச் சொல்றே?''

''நேத்து நீங்க எங்கப்பா கிட்டே சொன்னேளே, அவர் உங்களுக்குச் சின்ன வயசிலே செய்த உதவிக்குப் பதிலா அவரோட பிள்ளைக்கு உங்க கம்பெனியிலேயே வேலை போட்டுக் கொடுத்தாத்தான் உங்க மனசு சமாதானம் அடையும்னு. நீங்க பேசும்போதே கவனிச்சேன். இது சும்மா உபசார வார்த்தை இல்லே, உள்ளத்திலேருந்து வரதுன்னு கண்டு பிடிச்சேன். அதனாலேதான் நம்பிக்கையோட இப்ப வந்தேன். என் அப்பாவுக்குப் பட்டதாரியான பிள்ளைஇல்லே. ஆனா நான் பி.ஏ.படிச்ச பெண் இருக்கேன்.''

பத்மா ஆவலுடன் அவர் முகத்தைப் பார்த்தாள்.

கணபதி மூக்குக் கண்ணாடியைக் கழற்றி விட்டுப் பனித்த கண்களைத் துடைத்துக் கொண்டார்.

''சாரி பத்மா... உனக்கு நான் வேலை கொடுக்க முடியாது. மேற்கொண்டுவிவரங்களை உன் அப்பா கிட்டத்தான் பேசணும். அவரை வெத்தலை பாக்கு பழத்தோட எங்க வீட்டுக்கு வரச் சொல்லு''என்றுகூறியபோது அவர் மனம் தெளிவாக இருந்தது.

விளங்குவீர் நியூட்ராமுல் 'வஸ்தாத்'தாக.

# தாராசிங் பலப் பயிற்சித் திட்டம்

**உயரம் ஏற்றும் உடற்பயிற்சிகள்**

வலதுதோள் சுவரோடு ஒட்டும்படி நில். மூச்சை உள்ளிழுத்தபடி கால்கட்டை விரல்களால் எழும்பு. இடது கரத்தைத் தலைக்கு மேல்வீசி, எட்டின உயரம் சுவரைத் தொடு. மூச்சை வெளிவிட்டவாறு நிலை மீளு. இடது கரத்தால் 10 தடவை, வலது கரத்தால் 10.



பாதங்களை அகட்டி (இடைவெளி 10 அங்.) நில்; மூச்சை உள்ளிழுத்தபடி கால்கட்டை விரல்களால் எழும்பியவாறு, இரு கரங்களையும் வீசித் தலைக்குமேல் எட்டின உயரம் தூக்கு, விரல்கள் சந்திக்கும்வரை. மூச்சை வெளிவிட்டவாறு நிலை மீளு. 10 தடவைகள்.



கால்நீட்டி உட்காரு: இயன்ற தூரம் கால்களை அகட்டு. மூச்சை உள்ளிழுத்தபடி முன்புறம் குனிந்து, இருகைகளால் இடது பாதத்தையும் தலையால் முழங்காலையும் தொடமுயல். மூச்சை வெளிவிட்டவாறு நிலை மீளு. இடது கால்புறம் 10 தடவை, வலது கால்பு' 10.



பருகுவாய் தினமும் பலம்பெருக்க நியூட்ராமுல். அமுல் பால்வளம், அருமையான மால்ட், ஆரோக்கிய வைட்டமின்கள், ஆர்வமிகு புரதம், ஆதார உலோகதாதுக்கள், சப்புக் கொட்டிட சாக்லேட் சுவை. அவ்வளவுக்கும் விலையில் மலிவு.. போர்ன்விடா, பூஸ்ட், மால்டோவா எதனையும் விட.





daCunha/GCM/69/82/TM

நியூட்ராமுல் துணையால்... கட்டுடல், தெம்பு, தொட்ட தெல்லாம் பலிதம், உச்ச உணர்வு...உன் பெயரைச் சொல்லுதடா 'நியூட்ராமுல் வஸ்தாத்' !




அமுல் படைப்பு

**நியூட்ராமுல்**

குஜராத் கோ ஆபரேட்டிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிட்.,
ஆனந்த், குஜராத்.



நடையில் மிதியடிகளை விட்டு, வீட்டுக்குள் நுழைந்து தன் அறைக்குச் செல்ல முற்பட்ட கார்த்தியை ராமேசனின் குரல் நிறுத்தியது.

''கார்த்தி!''

கார்த்தி நின்றான். ''என்னப்பா?'' என்றான் மெலிதான குரலில்.

''ஒரு நிமிஷம் இப்படி வந்துவிட்டுப் போடா!''

கார்த்தி மெதுவாய் நடைவிட்டு அவரை நெருங்கினான். படித்துக் கொண்டிருந்த அன்றைய தினசரியை நிதானமாய் நீவிமடித்துக்கொண்டே கார்த்தியைஏறிட்டு ார் ராமேசன். சொன்னார்:

''அஞ்சு நிமிஷத்துக்கு முன்னாடிதான் கோதண்டம் மாமா வந்துட்டுப் போனார்.''

''சரி!'' என்றான் கார்த்தி அலட்சியமாக.

''என்னடா சரி? அவருக்கு நான் என்ன பதிலைச் சொல்லட்டும்?'' ராமேசன் லேசாய்க் கோபப்பட்டார்.

''நேத்தி வரைக்கும் நான் என்ன பதிலைச் சொல்லிட்டிருந்தேனோ அதே பதிலைச் சொல்ல வேண்டியதுதானே! இன்னிக்குப் புதுசா நான் ஒண்ணையும் சொல்லிடப் போறதில்லே.''

கார்த்தி பேசப் பேச—

சமையலறையிலிருந்து — கண்களில் ததும்பி விட்ட நீருமாய், கையில் கரண்டியுமாய் வெளிப்பட்டாள் தனம், கார்த்தியின் அம்மா.

''கார்த்தி... ஏண்டா இப்படிப் பிடிவாதம் பிடிக்கிறே?... அப்பா சொல்வதைக் கொஞ்சம் கேளேண்டா.''

''அம்மா!'' கோபமாய்த் திரும்பினான் கார்த்தி. ''நீயும் சரி அப்பாவும் சரி, என்னைப் புரிஞ்சுக்காமப் பேசறீங்க. நான் கல்யாணம் பண்ணிக்க மாட்டேன்னு சொல்லலையே! வேலை கிடைக்கட்டும் பண்ணிக்கிறேன்னு சொல்றேன். கையில் வேலையில்லாமே ஒரு பொண்ணுக்குக்கணவனாகிறதைக் காட்டிலும் — கையில் டிகிரியை வெச்சுக்கிட்டு ஊரைச் சுத்திட்டு வர்றது அப்படியொன்றும் கேவலமில்லே.''

''கோதண்டம் மாமா பொண்ணு அனுவுக்கு வர்ற வைகாசிக்குள்ள கல்யாணத்தை முடிக்கணுமாம்.. இல்லேன்னா அந்தப் பொண்ணுக்கு ஏழு வருஷத்துக்கு மாங்கல்ய பாக்யமே இல்லையாம். ஒரு ஜோஸ்யரு மாத்திரம் இல்லே... ஊர்ல இருக்கிற எல்லா ஜோஸியர்களும் அதே பதிலைத்தான் சொல்றாங்களாம். கோதண்டம் மாமா கண்ணில ஜலம் விட்டுக் கதறாத குறையா என்கிட்ட கெஞ்சறார். அவர்உங்கம்மாவுக்கு அண்ணன், உனக்குத் தாய் மாமன். அவருக்கு ஒரு கஷ்டம் வந்தா நாம அதைப் பார்த்துட்டிருக்கிறது நல்லா இல்லே. வேலை கிடைக்கிறப்போ உனக்குக் கிடைக்கட்டும்... அனு நம்ம வீட்டுப் பொண்ணு மாதிரி. பிறத்தியார் வீட்டிலிருந்து கொண்டு வர்ற பொண்ணில்லே... உனக்கு வேலை இல்லாததைப் பத்திஅனுஇளப்பமாநினைச்சுக்கவேமாட்டா''

ராமேசன் பேசப் பேசப் பேச்சில் குறுக்கிட்டான் கார்த்தி.

''ஆரம்பத்தில் அனு அப்படி யெல்லாம் நினைக்க மாட்டாள். வாஸ்தவந்தான்பா!... ஆனா நாளாக நாளாக நான் வீட்ல வேலை இல்லாம உட்கார்ந்திட்டிருக்கிறதைப் பார்க்கப் பார்க்க அவளுக்கு என் மேலே வெறுப்பு வந்துடும்....''

தனம் தவிப்போடு கார்த்தியை நெருங்கி அவனுடைய கையைப் பற்றினாள். ''கார்த்தி! நீ வேலைக்குப் போய்த்தான் தீரணும்கிற கட்டாயம் இல்லேடா... உங்கப்பா கை நிறையச் சம்பாதிக்கிறார். வீட்டு வாடகை வருது. கிராமத்திலிருந்து நமக்கு நெல்லு வருது. போதாக் குறைக்கு உன்னோட தம்பி

ராஜேஷ்குமார்



பிரகாஷ் ஸ்பேர் பார்ட்ஸ் ஏஜன்சி எடுத்து நிறையச் சம்பாதிக்கிறான்....''

தனம் சற்றே பேச்சை நிறுத்த ராமேசன் தொடர்ந்தார். ''உன்னோட தம்பி பிரகாஷுக்கும் தூர இடத்திலிருந்து பெண் கொடுக்க முன் வர்றாங்க... உன்னோட கல்யாணம் நடந்தப்புறம்தான் அவனோட கல்யாணத்தைப் பத்தி யோசிக்க முடியும்... அனுவோட ஜாதகத்தில் அந்தச் சிக்கல் இருக்கிறதுனாலதான் உன்னோட கல்யாணத்துக்கு நாங்க இவ்வளவு அவசரப்படறோம்.''

கார்த்தி குழப்பமாய்ச் சில விநாடிகள் கண் மூடி நின்றான். பிறகு கண்களைத் திறந்தான். முடிவான குரலில் சொன்னான்.

''என்னை மன்னிச்சுடுங்கப்பா! யாருடைய கட்டாயத்துக்காகவும் நிர்ப்பந்தத்துக்காகவும் நான் கல்யாணம் பண்ணிக்க விரும்பலே. எனக்குன்னு ஒரு சுய சம்பாத்தியம் என்னிக்கு வருதோ அன்னிக்குத்தான் எனக்குக் கல்யாணம்... அனுவுக்கு வேற மாப்பிள்ளை பார்க்கச் சொல்லுங்க மாமாவை!''

''இதுதான் உன்னோட முடிவா?'' ராமேசன் கோபமாகக் கேட்டார்.

''ஆமா... ஆமா...ஆமா!''

''அப்போ நாங்க மனசுக்குள்ள வெச்சிருக்கிற முடிவையும் கேட்டுக்கோடா!''

கார்த்தி குழப்பமாய் ராமேசனைப் பார்த்தான். அவர் தொடர்ந்து பேசினார்: ''அனுதான் இந்த வீட்டுக்கு மருமகள்னு என்னிக்கோ முடிவான விஷயம். வேலை கெடைச்சாத்தான் கல்யாணம் பண்ணிக்குவேன்னு நீ அடம் பிடிக்கிறே! வர்ற வைகாசிக்குள்ளே அனுவுக்குக் கல்யாணத்தை முடிக்கணும்னு உன்னோட மாமா அவசரப்படறார். உனக்கு வேலை கிடைக்கிறதுக்குள்ளே ஏகப்பட்ட வைகாசி மாசம் வந்துட்டுப் போயிடும். அதனாலே....!''

''அதனாலே...?'' கார்த்தி நெற்றியைச் சுருக்கினான்.

''அப்ப இந்த வீட்டுக்கு மருமகளா வரணும்னு உன்னோட தம்பி பிரகாஷுக்கு அவளைக் கட்டிக்கலாம்னு



# அனுதான் இந்த வீட்டு மருமகள்..

இருக்கோம். உனக்கொன்றும் ஆட்சேபனை யில்லையே?''

கார்த்தி புன்னகைத்தான். ''அப்பாடி! ப்ராப்ளம் சால்வ்டு... தாராளமா தம்பி பிரகாஷுக்குக் கல்யாணத்தை நடத்தலாம். எனக்கு என்னோட மூக்களவு கூட அப்ஜெக்ஷன் இல்லே....''

தனம் அழாக் குறையாய்ப் பேசினாள், ''டேய், கார்த்தி! நல்லா யோசிச்சுப் பேசுடா. உனக்கு முன்னாடி பிரகாஷுக்குக் கல்யாணத்தை நடத்தினா ஊர்லஇருக்கிறவங்க ஒரு மாதிரியாப் பேசுவாங்கடா! பின்னாடி உனக்கு வேலை கிடைச்சு பெண்ணைத் தேடறப்போ பெண்ணைப் பெத்தவங்க ரொம்பவும் யோசிப்பாங்க!''

''அனு இந்த வீட்டுக்கு மருமகளா வரணும்னு நீ ஆசைப்படறே. என் மூலமா அந்த ஆசை நிறைவேறப் போறதில்லே. தம்பிக்கு அனுவைக் கட்டிக்கிட்டு வர்றதைத் தவிர வேற வழியே இல்லே. தம்பிக்குச் சொந்தமா பிசினஸ் இருக்கு. என்னை மாதிரி வேலை தேட வேண்டிய பிரச்சினை அவனுக்கு இல்லே... என்னைப் பத்தி யோசிக்காம மளமளன்னு கல்யாண காரியத்தில இறங்குங்க! தம்பிக்கு இந்தக் கல்யாணத்தில் இஷ்டம் தானே?''

ராமேசன் மோவாயைத் தேய்த்துக் கொண்டே சொன்னார்: ''முதல்லே மாட்டேன்னு சொன்னான். 'அண்ணனுக்கு முன்னாடி நான் கல்யாணம் பண்ணிக்க மாட்டேன்'னு பின்வாங்கினான். நானும் அம்மாவும் கோதண்டம் மாமாவும் நிலைமையை எடுத்துச் சொல்லி ஒத்துக்க வெச்சோம்.''

''அவனோட மனசு மாறினாலும் மாறிடும். உடனடியா முகூர்த்த தினம் குறிச்சு மண்டபம் பேசி பத்திரிகையை அச்சடிக்கக் குடுத்துடுங்கப்பா!''

படபடவென்று சொல்லிவிட்டு—

கார்த்தி தன் அறைக்குள் நுழைந்து கொண்டான்.



தேவாங்கர் கல்யாண மண்டபம்.

விடியற்காலை மூன்று மணி.

ரோட்டை அடைத்த மாதிரிபோட்டிருந்த பந்தலின் முன்பு பெட்ரோமாக்ஸ் விளக்குகள் புகையைக் கக்கியபடி ஒளிர்ந்து கொண்டிருக்க, முகூர்த்த நேரத்துக்கு வேண்டிய அத்தியாவசியமான பொருள்களைப் பையில் எடுத்துக் கொண்டு ஸ்டோர் ரூமிலிருந்து வெளிப்பட்ட கார்த்தி சட்டென்று நின்றான்.

பக்கத்து அறையிலிருந்து தாழ்ந்த ஸ்தாயியில் குரல்கள் கேட்டன.

யார் பேசுகிறார்கள்?

மெல்ல எட்டிப் பார்த்தான் கார்த்தி.

பிரகாஷ் நடுவில் நின்றிருக்க, அவனைச் சுற்றிலும் தனம், ராமேசன், கோதண்டம் மாமா சூழ்ந்திருந்தார்கள். எல்லோருடைய முகங்களிலும் இருள்.

''டேய், பிரகாஷ்! இந்தச் சின்ன விஷயத்தைப் போய்ப் பெரிசு படுத்தாதேடா!'' தனம் பிரகாஷின் கைகளைப் பற்றியபடி கெஞ்சிக் கொண்டிருந்தாள்.

''எதம்மா சின்ன விஷயம்? அனுவோட காதுக்குக் கீழே கழுத்துக்குப் பக்கத்திலே ஒரு பத்துப் பைசா அளவுக்கு வெள்ளையாத் தெரியற வியாதி சின்ன விஷயமா? உன்னோட அண்ணா பொண்ணுங்கிறதுக்காக எப்படியிருந்தாலும் கட்டிக்கிறதா?'' — பிரகாஷ் குரலை அடக்கிச் சீறிக் கொண்டிருந்தான்.

கார்த்திக்கு நெஞ்சை அடைத்தது.

கோதண்டம் மாமா அழுகிற குரலில் பேசிக் கொண்டிருந்தார். ''பிரகாஷ்! அனுவோட கழுத்தில வெள்ளையா இருக்கிறது நீ நினைக்கிற மாதிரி வியாதி யில்லேப்பா. டாக்டர் கிரிராஜன்தான் அவளுக்கு ட்ரீட்மெண்ட் எடுத்திட்டிருக்கிறார். அது ஒரு மாதிரி தேமலாம். சீக்கிரத்தில அந்த இடத்தில தோல் பழைய நிறத்துக்கு வந்துடுமாம்....''

பிரகாஷ் எரிச்சலோடு 'உச்'கொட்டினான். ''அனுவோட கழுத்தில் இருக்கிறது நிச்சயமா தேமல் இல்லே....'' பிரகாஷ் குரலை உயர்த்தினான்.

ராமேசன் பதற்றப்பட்டார். ''கொஞ்சம் மெதுவாப் பேசேண்டா!''

பிரகாஷ் ஒரு கோணல் சிரிப்புச் சிரித்தான். ''மெதுவாப் பேசினா அடங்கிப் போற சமாசாரம் இல்லேப்பா இது.... மாமா சாமான்யப்பட்டவரில்லே. அனுவோட கல்யாணத்தைச் சீக்கிரமா முடிக்க ஏன் இவ்வளவு அவசரப்பட்டார்னு இப்பத்தான் எனக்குப் புரியறது. அண்ணன் எப்படியோ தப்பிச்சுட்டார்... மாட்டிக்க இருந்த நானும் நல்ல வேளையா கடைசி நேரத்தில் தப்பிச்சுட்டேன்!''

தனம் புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண்டாள். ''டேய் பிரகாஷ்! இன்னும் ரெண்டு மணி நேரத்திலே முகூர்த்தம். உறவு ஜனமெல்லாம் ஏராளமா வந்திருக்கு. இப்பப் போய்க் கல்யாணத்தை நிறுத்தினா எவ்வளவு அவமானம்... யோசிச்சுப் பாருடா!''

பிரகாஷ் கையமர்த்தினான். ''மனசுக்குப் பிடிக்காத ஒரு பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கிட்டு அருவருப்புத்தனமா அவளோட வாழ்க்கையை நடத்தறதை விட கல்யாணத்தை நிறுத்தறதே மேல்!''

ராமேசன் 'பிரகாஷைக் கோபமாகப் பார்த்தார்.

''நீ இப்படியெல்லாம் பேசறது கொஞ்சங்கூடச் சரியில்லேடா பிரகாஷ்... அனுவோட கழுத்திலே இருக்கிற தேமலைப் பார்த்துட்டு நீயாவே ஏதேதோ கற்பனை பண்ணிட்டுக் கல்யாணத்தை நிறுத்தப் பார்க்கிறே!''

பிரகாஷ் முகம் சிவக்கக் கத்தினான். ''நீங்க என்னதான் சொன்னாலும் சரி. அனுவைக் கல்யாணம் பண்ணிக்க நான் தயாரா யில்லே'' — பிரகாஷ் வெளியேறினான்.

''டேய்!'' — ஆவேசமாய்ப் பேச ஆரம்பித்த தனத்தைக் கோதண்டம் மாமா அமர்த்தினார். ''தனம் பிரகாஷை வற்புறுத்தாதே. எல்லாம் எம்பொண்ணோட ஜாதகக்கோளாறு. கல்யாணத்தை நிறுத்திடலாம்!''

**''மா**மா!''

குரல் கேட்டு மூவரும் திரும்பினர்.

கார்த்தி கதவோரமாய் நின்றிருந்தான். மெல்லிய குரலில் சொன்னான்.

''அனுவுக்கு மாங்கல்ய பாக்கியம் இல்லேன்னு சொல்லாதீங்க மாமா... நிச்சயமா அனுவுக்கு மாங்கல்ய பாக்கியம் இருக்கு.''

''கார்த்தி!'' — கத்திக் கொண்டே தனம் அவனருகே ஓடிவந்தாள்.

''கல்யாணத்தை நிறுத்தாதீங்கம்மா. அனுவோட கழுத்திலே இருக்கிறது தேமலா இல்லே வியாதியா... அது என்னவாக் இருந்தாலும் சரி. அனுவைக் கட்டிக்க நான் மனப்பூர்வமாச் சம்மதிக்கிறேன். தம்பி பிரகாஷைக் கட்டாயப்படுத்தாதீங்க!''

''கார்த்தி!''

மூவரின் விழிகளிலும் ஆனந்தக் கண்ணீர் அசைந்தது.

**மு**தலிரவு.

காலில் விழுந்து வணங்கிய அனுவைத் தூக்கி நிறுத்தினான் கார்த்தி. அவனுடைய பார்வை அவளுடைய கழுத்துப் பிரதேசத்தில் அலைந்தது. மல்லிகைப் பூப் பந்தையும், கனகாம்பரச் சரத்தையும் விலக்கிப் பார்த்தான். அனு மெல்லப் புன்னகைத்தாள்.

''என்ன அத்தான்?''

''பிரகாஷை உன்கிட்டயிருந்து பிரிச்ச அந்தத் தேமலைத் தேடறேன்.''

உதடுகள் பிரியாமல் சிரித்தாள் அனு. ''தப்பு அத்தான்! நீங்க சொல்ற வார்த்தை தப்பு. உங்களை என்கூடச் சேர்த்து வெச்ச தேமல்னு சொல்லுங்க!''

''நீ என்ன சொல்றே அனு!''

''உண்மையைச் சொல்லட்டுமா?''

''உம்...'' என்றான் குழப்பமாய்.

அனு புன்னகை மாறாமல் சொல்லிக் கொண்டிருந்தாள்.

''என்னை உங்க வீட்டுக்கு மருமகளாக் கொண்டு வரணும்னு உங்கம்மா ஆசைப்பட்டாங்களே தவிர, என்னோட மனசுல இருக்கிற ஆசையை அவங்க புரிஞ்சுக்கலே! என்னோட மனசுல நீங்கதான் இருக்கிறீங்க என்கிற உண்மையை முதல்ல புரிஞ்சுக்கிட்டவர் உங்க தம்பிதான். வேலை கிடைக்காமக் கல்யாணம் பண்ணிக்கிறதில்லேங்கிற முடிவில் உறுதியா நிக்கிற உங்களைத் திசை திருப்ப நான், உங்க தம்பி, மாமா, அத்தை, எங்க அப்பா எல்லாருமே சேர்ந்து இந்தத் திட்டத்தைப் போட்டோம். உங்க தம்பி பிரகாஷ் என்னோட கழுத்திலே இல்லாத 'வெள்ளைத் தழும்பை'க் காரணம் காட்டி என்னைக் கல்யாணம் பண்ணிக்க மறுக்கிற மாதிரி நடிக்க — அத்தையும், மாமாவும், எங்கப்பாவும் அவரைச் சமாதானப்படுத்துற மாதிரி பாவ்லா பண்ண... அறைக்கு வெளியே கேட்டிட்டிருந்த நீங்க மனம் மாறி.....''

''இதுக்கு மேலே சொல்லாதே!'' — காதுகளை இரு கைகளாலும் இறுகப் பொத்தியபடி அனுவின் மடியில் முகம் புதைத்தான் கார்த்தி.




பள்ளிக்கூடம் திறப்பது, ஆஸ்பத்திரி கட்டுவது, ஜல வசதி பண்ணித் தருவது எல்லாம் ஸர்வீஸ்தான். நாம் சோஷல் ஸர்வீஸ் — சமூகப் பணி — என்றாலே இதுகளைத்தான் நினைக்கிறோம். ஆனால் இந்தப் பணியெல்லாம் இறை பணியில் கொண்டு சேர்த்தால்தான் நிறைவுள்ளதாகும் என்று நமக்குப் புரிய வைக்கிறதற்காகத்தான் ஈசுவர சம்பந்தமான பணிக்கே 'திரு' என்று அடைமொழி கொடுத்து, ''திருப்பணி'' என்று பேர் வைத்திருக்கிறார்கள். 'திருப் பணி' என்கிற வார்த்தை எல்லா ஸர்வீஸுக்கும் உச்சி அதுதான் என்று அர்த்தம் கொடுக்கிறது.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி
சந்திர சேகரேந்திர சரஸ்வதி
சங்கராசாரிய சுவாமிகள்

சாத்திரப் படிப்பினாலும் தர்க்க வாதங்களாலும் ஒருவன் ஆன்மீக மேன்மையை அடைய முடியாது. இதய நெகிழ்ச்சியின் மூலமே ஒருவன் ஆன்மீக நெறியில் முன்னேற முடியும்.

—இராமலிங்க வள்ளலார்

ஒரு நோய்க்குப் பல வகை வைத்தியம் கூறப்படுமானால் அதைக் குணப்படுத்த இயலாது என்று அர்த்தம்.

—ஆண்டன் செகாவ்

# அறிமுகங்கள் தொடர்கின்றன...

## படித்தாலும் துன்பம்: படிக்காதிருந்தாலும் துன்பம்



'' 'எங்கும் தமிழ் எதிலும் தமிழ்' என்ற முழக்கம்தான் சங்கநாதமாய்க் கேட்கிறதே யொழிய தமிழகத்தில் தமிழ்த் துறையில் புலவர் பட்டம் பெற்ற நான் ஒன்பது ஆண்டுகளாக வேலையின்றி இருக்கிறேனே'' என்று வருந்துகிறார் ச. சுகுமாரன். ''படித்தாலும் துன்பம் படிக்காதிருந்தாலும் துன்பம் என்றால் என்னைப் போன்ற இளைஞர்கள் என்ன செய்வது?'' என்று நொந்துகொள்ளும் இவர் பி. லிட். பட்டமும் பெற்றவர். ''வேலை இல்லையெனில் பட்டங்களுக்குப் பெருமை என்ன? சிறுமைதானே'' என வினவுகிறார்!

ச. சுகுமாரன் (வயது 31) 1-7, கருப்பூர் தெரு, அம்மையப்பன் அஞ்சல், தஞ்சை மாவட்டம், 613701.

## வேலை என்னும் மாரி பெய்யுமா?



பி. ஏ. சோஷியாலஜியும் பிறகு காந்தி கிராமத்தில் எம். ஏ. கிராம சமூக இயலும் படித்து கார்ட் பஞ்சிங் டிப்ளமாவும், கம்ப்யூட்டர் ப்ரோகிராமிங்கும் பயின்ற பி. செழியனுக்குப் பிரிண்டிங் பிரஸ் அனுபவமும் உண்டு. எனினும் ''ஏழு ஆண்டுகளாக இடி போன்ற இன்னல்களும் இடையூறு என்ற மின்னல்களும் மாறி மாறி வந்து போய்க்கொண்டிருக்கின்றனவே யன்றி வேலை என்னும் மாரி என் வாழ்வில் இன்னும் பெய்யவில்லை'' என்று கூறி ஏங்குகிறார்.

பி. செழியன் (வயது 30) 12, ஆதிமூலம் பிள்ளை சந்து. மாகாளிப்பட்டி, மதுரை-1.

## மனக்கூண்டின் உணர்ச்சிக் கைதிகள்



பி.எஸ்ஸி. பி.எட் (ஆசிரியர் பயிற்சி) பட்டம் பெற்று ஐந்து ஆண்டுகளாகியும் வேலை கிடைக்காததால் மனம் நொந்திருக்கும் மு. மனோகரன், ''அன்றாடம் வீட்டுக்குக் காய்கறி வாங்கிக் கொடுக்கக் கூடப் பயன்படாத தாவர இயல் துறை'' படித்திருப்பதாக அலுத்துக் கொள்கிறார். டுடோரியல் காலேஜ் ஒன்றில் வெளியே சொல்ல முடியாத அளவு குறைந்த சம்பளம் வாங்கிக் கொண்டு வேலை பார்த்த அனுபவங்களை மறந்துவிட விரும்புகிறார். ''ஆனால் ஒரு நல்ல வேலை கிடைக்கும் வரை மனக் கூண்டின் உணர்ச்சிக் கைதிகள் விடுதலை அடைவது எவ்விதம் சாத்தியம்?''

மு. மனோகரன், 941, ஒத்தைகத் தெரு. கரந்தை-613.002.

## கவலை எனும் சரம் படிந்து....



பி.எஸ்.ஸி (வேதியல்) படித்த சே. ராஜேஸ்வரன் வேலை கிடைக்காததால் ''இதயத்தில் கவலை யெனும் சரம் படிந்து என்றோ இதயத்தில் புதைந்து கிடந்த எழுத்தார்வம் முளைவிடலாயிற்று'' என்கிறார். இலக்கியத் துறையில் அறிமுகம் அமரர் கல்கி நினைவு சிறுகதைப் போட்டி மூலமாக.

சே. ராஜேஸ்வரன். (வயது 27) 61, சவுக்கண்டி தெரு. பட்டுக்கோட்டை-614601.

# ஏழிசை நாயகன்

## 26

கையூட்டுப் பெறத் தயங்காதவர்கள் முத்தரையரின் அதிகாரிகள் என்பதை அவர்களது பலவீனங்களுள் ஒன்ருகத் தன் முதல் அனுபவத்திலேயே அறிந்திருந்த விஜயாலயன், அரண்மனை விளாகத்தருகே விடுதிக்குத் திரும்புவதாகக் கூறி அரச குடும்பத்தினரிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு நேரே கோட்டைத் திருவாசலுக்கு மறுபடியும் வந்து சேர்ந்தான், ஜெயசிங்கனுடன்.

திருவாசல் முதலியிடம் சில பொற்காசுகள் கைமாறியதும் அவன் வாயெல்லாம் பல்லாக இவர்களுக்குத் தேவைப்பட்ட தகவல்களைத் தந்தான். குறிஞ்சி மகள் குவளையின் நாடோடித்தனமும், எழிலார்ந்த தோற்றமும், உறுதியான உடலமைப்பும், துடுக்கான பேச்சும் திவாகரனைப் பெரிதும் கவர்ந்து விட்டன. அன்றிரவுக்கு அவளைத் தன் போகப் பொருளாக்கிக் கொள்ளத் தீர்மானித்திருக்கிருன். அவர்கள் தங்குமிடத்தைத் தெரிந்து கொண்டு அங்கே தனது வீரர்களை அனுப்பி அவளைத் தன் மாளிகைக்கு அழைத்து வர வேண்டும் என்று திட்டமிட்டிருக்கிருன். இந்நேரம் அவன் கட்டளை நிறைவேற்றப்பட்டிருக்கும்.

''சொல்லு. அவர்கள் எங்கே தங்கியிருக்கிருர்கள்?'' என்று ஜெயசிங்கன் பரபரப்புடன் வினவ, அராபியன் உள்ளத்தில் எரிமலை குமுறியது.

''கூலவாணிகர் விடுதியில் இடமிருப்பதாக அறிந்து அங்கே போகச் சொன்னேன். அந்த விடுதிக் காப்பாளனுக்குத் திவாகரனின் ஆசைகளும் தெரியும்; வெகுமதிகளும் கிடைக்கும். எனவே அங்கிருந்து அந்தப் பெண்ணைக் கடத்திப் போவதில் அதிக இடையூறு இராது!''

அவன் பேசி முடிப்பதற்கு முன்பே குதிரைகளை நண்பர்கள் தட்டிவிட்ட போதிலும் அவர்கள் கூல வாணிகர் தெருவை அடையும்போது இருட்டி அரைசாமத்துக்கும் மேலாகி விட்டது. 'நான் மறைகளும்ஒலிக்கும் சந்திரலேகை சதுர்வேதிமங்கலத்தில் அன்றிரவு ஓர் அபலையின் பரிதாப ஓலத்தையும் எழச் செய்யப் பார்க்கிருனு திவாகரன்! சமயம் வராமலா போகும் அவனைப் பழி வாங்க'



என்று மனத்துக்குள் கறுவிக் கொண்டு குதிரையை விரட்டினான் விஜயாலயன்.

அதிகார பலம் நிறையவே இருந்தாலும் குவளையைக் கடத்திக் கொண்டு போவதொன்றும் அவ்வளவு சுலபமில்லை என்பதைத் திவாகரனின் வீரர்கள் இதற்குள் நன்றாகவே புரிந்து கொண்டிருந்தனர்.

இரவு உணவை நிதானமாக முடித்துக்கொண்டு எழுந்த சினன் கூடத்தில் குவளை உரக்கக் குரலெடுத்துப் பேசுவதைக் கேட்டு நிலைமை ஏதோ சரியில்லை என்று புரிந்து கொண்டவனாகக் கை கழுவினான். சற்றுத் தள்ளியிருந்த உரலும் அதன் பக்கலில் மூலைச் சுவரில் சாத்தி வைக்கப்பட்டிருந்த உலக்கையும் அவன் கண்களில் தென்பட்டன. உலக்கையை எடுத்துக் கொண்டு கூடத்துக்கு வந்தான்.



''உன்னை மட்டும்தான் அழைத்து வருமாறு ஆணை'' என்று அப்போது வீரர்களில் ஒருவன் குவளையிடம் கூறிக் கொண்டிருந்தான்.

''அழைத்துப் போவதானால் எங்கள் அனைவரையுமே அழைத்துச் செல்லுங்கள். இல்லையேல் வெறுங் கையுடன் திரும்புங்கள். இது என்னுடைய ஆணை!'' என்று குவளை அதிகாரம் செய்தாள்.

''பெண்ணே! திவாகரன் யார் தெரியுமா? மன்னரின் தம்பி மகன். குதிரைப் படைத் தளபதி. சொந்த மகனையே ஒதுக்கி நாளை இவருக்கே மன்னர் இளவரசுப் பட்டம் அளித்தாலும் அதிசயிப்பதற்கில்லை!''

''அவர் இளவரசராக இருக்கட்டும் அல்லது சர்வலோக சக்கரவர்த்தியாகவே இருக்கட்டும். நாங்கள் அடிபணிய மாட்டோம். நான் நாடோடிகளின் ராணி! எங்களுக்கு விருப்பமில்லாததை நாங்கள்செய்வதில்லை.''

''நீ வாய்த் துடுக்குக்காரி என்று தளபதி சொல்லி அனுப்பியது சரிதான்'' என்றான் வீரர் தலைவன். ''உன் வாய்த்துடுக்கில் பாதி உடலிலும் இருக்குமானால் இன்று இரவுப் போது எங்கள் தானைத் தலைவருக்கு ரொம்பவும் உற்சாகமாகத்தான் இருக்கும்!''

''அப்படியா! எலும்பு முறிவதும் பற்கள் உடைவதும் ஒருவருக்குப் புத்துணர்ச்சி ஊட்டும் என்று இப்போதுதான் தெரிந்து கொள்கிறேன் நான்!''

''அடியே! வாதாடிக் கொண்டிருக்க எனக்கு நேரமில்லை. நீயாக வரவில்லையானால் கட்டி இழுத்துக் கொண்டு போக நேரிடும். அதை நீ விரும்ப மாட்டாய் என்றே நினைக்கிறேன்.''

''மாட்டேன்! முத்தரையர் ஆட்சியில் இப்படிப் பெண்கள் கொடுமைப்படுத்தப்படுவதை நிச்சயம் விரும்ப மாட்டேன். அதனால் உங்கள் முயற்சி வெற்றி பெற இடம் தரவும் மாட்டேன்!''

வீரர் தலைவன் இனிப் பேசிப் பயனில்லை என்று புரிந்து கொண்டவனாக அவள் கரத்தைப் பற்றி இழுத்தான்.

அவ்வளவுதான். மின்னல் வேகத்தில் சீனன் கை உலக்கை செயல்பட்டு இடி தாக்கினாற் போல அவ்வீரன் தலையில் விழ, அவன் தரையில் சரிந்து பேச்சுமூச்சற்றுக் கிடந்தான். உடன் வந்த மற்றவர்கள் வாளை உருவிக் கொண்டு நெருங்க, சீனன் உலக்கையை இரு கரங்களாலும் பற்றிச் சுழற்றினான். சிலம்பமாடுவது போல அவன் அநாயாசமாக உலக்கையைச் சுழற்றவும் அந்த வீரர்கள் மருண்டு பின்வாங்கி விடுதியின் வாசலை நோக்கி நகர்ந்தார்கள்.

அச்சமயம் பார்த்து அங்கு வந்து குதிரைகளை விட்டு இறங்கிய அராபியனும் ஜெயசிங்கனும் தங்கள் வாள்களை உருவ, திவாகரனின் வீரர்களோ இந்த இரு முனைத் தாக்குதலைச் சமாளிக்கும் வகை அறியாது வாட்களைப் போட்டுவிட்டுக் கையெடுத்துக் கும்பிட்டனர்.

''ஓடுங்கள்! பிழைத்துப் போங்கள்'' என்று விரட்டினான் ஜெயசிங்கன். புரவிகள் குளம்பொலி எழுப்பிப் பறந்தன.

இதற்குள் குவளையும் மற்றவர்களும் வாசலுக்கு வந்து விட்டனர்.

''பிரபோ! இந்த ஏழையைக் காப்பாற்ற தாங்களே நேரில் வந்தீர்களா?'' என்று நன்றியும் பெருமிதமும் ஆவலும் ஆனந்தமும் போட்டியிடக் கேட்ட குவளை ஓடி வந்து ஒரு துள்ளுத் துள்ளி அராபியனின் கழுத்தைத் தன் கரங்களால் சுற்றி வளைத்துத் தொங்கினாள்.

அவளை இறுகத் தழுவிக் கன்னத்தில் இதழ் பதித்த விஜயாலயன், அடுத்த கணமே தன் தவறை உணர்ந்தவனாக வெற்றிக்குரிய ஆத்தி மாலையை மனமின்றிக் கழற்றி வைப்பது போல் தன் தோள்களில் தவழ்ந்த அவள் கரங்களை நீக்கினான்.

''குவளை! உனக்கு எல்லாமே மறந்துவிட்டதா? என்னை உனக்கு அறிமுகமானவனாக நீ காட்டிக் கொள்ளலாமா?'' என்று கேட்டான்.

''பிரிவாற்றாமை என்னைப் பிச்சியாக்கிவிட்டது பிரபோ!'' என்று ரகசியக் குரலில் கூறி மனமின்றிப் பிரிந்தாள் அவள்.

''நல்லவேளை அருகில் நம்மைச் சேர்ந்தவர்களைத் தவிர வேறு யாருமில்லை'' என்றான் விஜயாலயன். ''ஆனால் விடுதிக் காப்பாளரும் தங்கியிருக்கும் மற்ற விருந்தினரும் அரவம் கேட்டு எந்தக் கணமும் வெளியே வரலாம்.''

''உங்களை அந்த வீரர்கள் பார்த்துவிட்டார்களே, நேரே திவாகரனிடம் போய்ச் சொல்வார்களே'' என்றாள் குவளை, கவலையுடன்.

''பாதகமில்லை. அவனுடைய நீசத்தனமும் வெளிப்படும் என்பதால் நான் இங்கு வந்ததற்கான காரணங்களைக் கேட்கத் துணிய மாட்டான். அப்படியே அவன் ஆராயப் புகுந்தாலும் சாலையோடு போய்க் கொண்டிருந்த நான் கூச்சல் கேட்டு உதவ உள்ளே நுழைந்ததாகக் கூறிக் கொள்வேன்.''

ஜெயசிங்கன் இடைமறித்துச் சொன்னான்: ''திவாகரன் அவ்வளவு எளிதாகத் தோல்வியை ஒப்புக்கொள்பவன் இல்லை. வேறு பெரியதொரு படையை இங்கு சற்று நேரத்தில் நாம் எதிர்பார்க்கலாம்!''

''அப்படியானால் இவர்கள் இங்கு இருக்கக் கூடாது. வேறு விடுதிக்கு இடம் மாறிவிட வேண்டும். ஏன், நாம் தங்கியிருக்கும் விடுதிக்கே அழைத்துச் சென்று விடலாமே!''

''அழகுதான்'' என்று குறும்புச் சிரிப்பை உதிர்த்தாள் குவளை. ''திவாகரனின் தூண்டிலிலிருந்து தப்பிய என்னை உங்கள் வலையில் சிக்க வைக்கப் பார்க்கிறீர்களா?''

விஜயாலயனும் சிரித்தவாறே தனது நீண்ட தலையலங்காரத் துணியை வலை போல் விரிக்க, அவள் மகிழ்ச்சியோடு அதில் சிக்க, வலையைச் சுருக்கினான். ஆத்மா பரமாத்மாவுடன் ஐக்கியப்பட்டது போல்சகலத்தையும் மறந்த ஓர் அமைதியான ஆனந்தத்தை அதிக நேரம் நீடிக்க ஜெயசிங்கன் அனுமதிக்கவில்லை. ''இவர்களை நம் விடுதிக்கு அழைத்துப் போவது வீண் வம்பை விலைக்கு வாங்குவதாக முடியும். திவாகரன் அனுப்பும் வீரர்கள் இங்கு இவர்களைக் காணோம் என்ற

# ஜலதோஷம் உங்கள் நாளையே கெடுக்க அனுமதிக்காதீர்கள்



## ஜலதோஷத்தைப் போக்கலாம்

நல்ல ஒரு நாளையே கெடுக்கும் மூக்கு ஒழுகுதல் அல்லது மூக்கடைப்பு, தலை கனம், தொண்டைக்கட்டு மற்றும் மார்சளி போன்றவற்றுடன் உள்ள ஜலதோஷத்திலிருந்து நிவாரணம் பெற ஒரு வழி இருக்கிறது.

## ஜலதோஷ மருந்து கொண்டு தாக்கிடுங்கள்

மற்ற உபாதைகளைப் போன்றே இதற்கும் சிகிச்சையளித்தால் போதாது. பாதிக்கப்பட்ட பாகங்களிலெல்லாம் ஒரே சமயத்தில் செயல் புரியவல்ல விசேட ஜலதோஷ மருந்தையே உபயோகியுங்கள்.

## கோல்டரின் ஜலதோஷத்திற்கு மட்டுமே

உங்கள் சுறுசுறுப்பைக் கெடுக்கும் அறிகுறிகள் அனைத்தையும் போக்குகிறது— கோல்டரின். இதிலுள்ள விசேட மருந்துப் பொருட்கள் ஜலதோஷத்தினால் பாதிக்கப்பட்ட எல்லா பாகங்களிலும் ஒருங்கிணைந்து செயல்புரிகின்றன. அதோடு, ஜலதோஷ எதிர்ப்பு சக்தியை வளர்த்திட இதில் வைட்டமின் C உள்ளது.

ஜலதோஷத்தினால் பாதிக்கப்படும் போது ஜலதோஷ மருந்தையே சாப்பிடுங்கள்.

# கோல்டரின்

விசேட ஜலதோஷ மருந்து

CASBC-64-172 TM

தும் நேரே நம் விடுதிக்குத்தான் வருவார்கள். வேறு இடம் தேடுவதுதான் உசிதம்.''

என்ன நேர்ந்தாலும் கண்டு கொள்ளக் கூடாது என்று உத்தரவு பெற்றிருந்த விடுதிக் காப்போன் இப்போதுதான் மெல்லத் துணிவு பெற்று வெளியே எட்டிப் பார்த்தான். திவாகரனின் ஆட்களைக் காணோம்! யாரோ அராபியன் ஒருவனும் இன்னொருவனும் இந்தக் குறிஞ்சி நில மக்களுடன் பேசிக் கொண்டிருக்கிறார்கள்! ''என்ன நடக்கிறது இங்கே?''

''முத்தரையர் ஆட்சியில் நடக்கக் கூடாததெல்லாம் நடக்கிறது. பெண்ணைக் கடத்திப் போகச் சதி நடக்கிறது! அதைக் கவனிக்காதது போல் ஒதுங்கிக்கொள்ளுமாறு விடுதிக் காப்பாளனுக்கு உத்தரவு பிறக்கிறது!'' என்று ஆத்திரமுடன் மொழிந்த ஜெயசிங்கன், சில வெள்ளிக் காசுகளைத் தரையில் அவன் எதிரே வீசினான். ''இவர்கள் இங்கு தங்கி அடைந்த அனுபவம் போதும், கிளம்புகிறார்கள்!'' என்றான்.

அவர்களை வேறு விடுதிக்கு இராத் தங்க அழைத்துச் செல்கையில், ''உனக்கு ஏற்பட்ட அனுபவங்களை யெல்லாம் விவரமாகக் கேட்க வேண்டும். துடியாக இருக்கிறேன்'' என்றான் விஜயாலயன். ''எப்படியோ ஏற்றுக்கொண்ட காரியத்தை வெற்றிகரமாக முடித்து விட்டாய்!''

''வெற்றியில் பெரும் பங்கு சீனனுடையது பிரபோ!'' என்றாள் குவளை. ''இப்போது திவாகரனின் ஆட்களிடமிருந்து என்னைக் காத்ததும் இவன்தான்.''

''ஆம்! இவன் இருக்கையில் எனக்கென்ன கவலை'' என்று சீனனின் பாறை போன்ற உடலைத் தட்டிக் கொடுத்தும் குத்து விட்டும் பாராட்டினான் விஜயாலயன். ''இவனை நம்பித்தானே உன்னைப் பாண்டிய நாட்டுக்கு அனுப்பினேன். யோசித்துப் பார்க்கையில் நான் பரபரப்படைந்து இங்கு ஓடி வந்ததே வியர்த்தம்தான்! எதற்காக என்றே புரியவில்லை!''

''இது கூடத் தெரியவில்லையா? அதற்குப் பெயர்தான் காதல்!'' என்றாள் குவளை.

ஜெயசிங்கனுக்குத் தெரிந்திருந்த வேறு ஒரு விடுதியை அவர்கள் நெருங்கியதும் வீதியிலிருந்தபடியே விடை பெற்றுக் கொண்டனர்.

களைப்புத் தீரக் குளித்து உணவருந்திப் படுக்கும்போது விஜயாலயன் சொன்னான்: ''என் குவளையை என்னிடமிருந்து பிரித்து வேறு ஓர் விடுதிக்கு அனுப்பி விட்டாய். இரவு எனக்குத் தூக்கமே வராது!''

இதற்குப் பதிலாக ஜெயசிங்கனின் குறட்டை ஒலித்தது.

'நந்திபுரியாம் பழையாறைக்குக் காரியம் முடித்த கையோடு திரும்புமாறு தான் உத்தரவிட்டிருந்த போதிலும் எதற்காகக் குவளை இங்கு வந்தாள்?' என்று யோசித்தான் விஜயாலயன். 'வேறு எதற்கு? என்னைப் பைத்தியமாக அடித்துக்கொண்டிருக்கும் அந்த உத்தம சீலி — சக்களத்தியாகப் போகிறவள் — எப்படி இருக்கிறாள் என்று பார்க்கத்தான்! வந்த இடத்தில் என் வெண் புரவி மீது அவள் ஆரோகணித்திருப்பதைப் பார்க்கப் பொறுமல் ஒரு போட்டிக்கும் வழி வகுத்துவிட்டாள்! பொல்லாதவள்!

'தேனில் குடிபுகும் இனிமை போலவும் புலவனின் பாடலில் வந்திணையும் நயன் போலவும் எவ்வளவு இயல்பாகவும் ஆசையாகவும் என்னைக் கட்டி அணைத்து என்னில் ஐக்கியமானாள்! அந்தக் கணங்கள்தாம் எத்தனை அமைதியாக, ஆனந்தமளிப்பனவாக இருந்தன! அங்கேயே லயித்து எளிதாகச் சொர்க்க வாசம் செய்வதற்குப் பதில் என் மனம் ஏன் இப்படி உத்தமசீலிக்காக ஏங்கித் தவித்து நரக வேதனை அனுபவிக்கிறது! கிட்டாத பொருளின் எதற்காக



1945ஆம் ஆண்டு, அந்தத் தலைவர் தாம் திரட்டும் நிதிக்காக உதவும்படி நாட்டு மக்களிடம் உருக்கமாகக் கேட்டுக் கொண்டார். ஸ்ரீரும்சந்த் தராக் என்ற ஒருவர் 30 ரூபாய்க்கான காசோலையை அனுப்பிவைத்தார். அதில் அந்தத் தலைவரின் பெயரைக் குறிப்பிடாமல் நாட்டு மக்கள் அவரைப் போற்றிப் பாராட்டிய பெயரை எழுதிவிட்டார். ஆகவே அதற்குப் பணம் தர பாங்க் மறுத்துவிட்டது. நிதி திரட்டிய மனிதருக்கோ பணத்தை விட்டுவிட மனம் இல்லை. அதனால் நாட்டு மக்கள் அழைக்கும் பெயராலேயே கையெழுத்திட்டு மீண்டும் அனுப்பி வைத்தார். ஆனால் மறுபடியும் செக் திரும்பி விட்டது. கிராஸ் செய்த செக்கானதாலும், அந்தப் பெயரில் பாங்க் அக்கவுண்ட் இல்லாததும் காரணம்.

கடைசியில் செக்கை அனுப்பியவருக்கே அதைத் திருப்பிவிட்டு, சரியான பெயரில் பணத்தை அனுப்பி வைக்கும்படி வேண்டிக் கொண்டார்.

அவர்— மகாத்மா காந்திதான். மகாத்மா காந்தி என்று கையெழுத்திட்ட அந்தச் செல்லாத செக்கை மதிப்பிலடங்காத மாணிக்கமாகக் கருதி இன்றும் பாதுகாத்து வருகின்றனர் தராக்கின் குடும்பத்தினர். காரணம் காந்திஜி மகாத்மா காந்தி என்று கையெழுத்திட்டது அந்த ஒரே ஒரு முறை மட்டுமே.

-நவநீத் (ஹிந்தி) பத்திரிகையிலிருந்து
-அ. கிருஷ்ணசங்கர்

நாட்டம் அதிகரிக்கிறது? ஏக்கம் பெருகுகிறது? கோபம் பொங்குகிறது?'

• • •

தேரின் முன் பக்கம் அராபியனின் பரிசாகிய வெண் புரவியைப் பூட்டியாகி விட்டது. மறுபுறம் தாம்புக் கயிற்றின் இரு முனைகளையும் பிணைந்து அதன் மையப் பகுதியைத் தன் மலை போன்ற மார்பில் மாலையாக்கி உள்ளங் கைகளையும் பயன்படுத்தி இழுத்தான் சீனன்.

குதிரையை விரட்ட தேர்ப் பாகன் இருந்தான். சீனனை ஊக்குவிக்கக் குவலை நின்றாள்.

போட்டி பலமாகத்தான் இருந்தது. பலமும் சமமாகத்தான் இருந்தது. குதிரை வென்றாலும் வருத்தம், சீனன் வென்றாலும் சங்கடம் என்ற நிலையில் தவித்துக் கொண்டிருந்தான் விஜயாலயன். 'எதற்காக இப்படி ஒரு விளையாட்டில் இறங்கினாள் குவலை!'

குதிரை அரும்பாடு பட்டு இழுத்தது. சீனன் ஓரடி பின்வாங்கினான்! "ஆ! ஆ! குதிரை வென்றது!" என்ற ஆரவாரமும் "அடடா! சீனன் தோற்றுவிடப் போகிறானே" என்ற அனுதாப ஒலியும் அடங்கு முன்னரே சீனன் ஒரு பெரு முயற்சி செய்தான். தேர் அவன் பக்கமாகக் குதிரையையும் பின் நோக்கி இழுத்துக்கொண்டு வெகு தூரம் வந்து விட்டது! வெற்றி யாருக்கு என்ற ஐயப்பாடு சிறிதும் இல்லாத நிலையில் எழுந்த வாழ்த்துக்கள் செவிப் பறைகளைக் கிழிக்க, குவலை சட்டென்று வெண் புரவியைத் தேரிலிருந்து விடுவித்து அதன் மீது சேணமின்றியே ஆரோகணித்தாள். அதனை அவள் தட்டிக் கொடுத்த விதத்திலும் தன் ஆளுமையைச் செலுத்திய தன்மையிலும் அது அடங்கிக் கட்டுப்பட்டு அவள் கருத்துப்படி நடந்து கொண்டது. ஒரு கரத்தை உயர்த்தி வெற்றிக்கு அறிகுறியாக அசைக்கவும் அரண்மனை மாந்தர் அனைவரும் மறுபடியும் ஆர்ப்பரித்தனர். உத்தமசீலியின் முகத்தில் ஆத்திரமும் ஏமாற்றமும் எள்ளும் கொள்ளுமாக வெடித்தன!

"நிறுத்துங்கள் இந்தக் கூச்சலை!" என்றான் திவாகரன். திடுக்கிட்டுத் திரும்பினான் விஜயாலயன். 'புதிய ஆபத்து போலிருக்கிறதே!'

"நேற்று இந்தக் குறிஞ்சி நிலக் கூட்டத்தார் தாங்கள் தங்கியிருந்த விடுதியிலிருந்து பல விலையுயர்ந்த பொருள்களைக் களவாடியிருக்கிறார்கள். போதாக் குறைக்கு இப்போது என் சகோதரியின் விலை மதிக்க முடியாத குதிரையை வேறு அபகரிக்கப் பார்க்கிறார்கள்!"

சரேலென அவனை ஏறிட்டு நோக்கினாள் குவலை. "நீங்கள் திருட்டுக் கொடுக்கவுமில்லை; நான் தங்கள் சகோதரியைப் போல் இதைத் தானமாகப் பெறவுமில்லை. பந்தயத்தில் நான் வென்றது இது."

"அதெப்படி ஒப்ப முடியும்? அனைவரும் பார்க்க முதலில் குதிரைதானே ஓரடி முன்னால் நகர்ந்தது?"

"பந்தயம் அதுவல்லவே! குதிரையை விடவும் சீனன் பலசாலி என்பதை நிரூபித்தாகி விட்டதே!"

"திவாகரா! வென்றது குவலைதான். குதிரை அவளுக்கே உரியது" என்றார் முத்தரையர்.

"இருக்கலாம் மன்னவா! ஆனபோதிலும் இவள் திருட்டுக் குற்றத்துக்குப் பதில் கூற வேண்டியவளாயிருக்கிறாள். இவர்கள் தங்கியிருந்த விடுதியின் காப்பாளன் அதிகரணத்தில் வழக்குரைத்திருக்கிறான். களவைத் தடுக்கப் போன நம் வீரரில் ஒருவன் சீனனால் கொல்லப்பட்டிருக்கிறான்!"

"திருட்டுக் குற்றம் எங்கள் மீது பொய்யாகச் சுமத்தப்பட்டிருக்கிறது என்பதே என் பதில்" என்றாள் குவலை. "மன்னர் நல்லவராக இருந்தால் மட்டும் போதாது; தன்னிடம் பணியாற்றுவோரிடம் நல்லொழுக்கத்தை வளர்க்கக் கூடிய வல்லவராயும் இருக்க வேண்டும். அவ்விதம் இல்லாதவரை எங்களுக்கு நியாயமும் கிட்டப் போவதில்லை." என்ற குவலை, 'எனவே நாங்கள் தப்பி ஓடுவதுதான் ஒரே வழி' என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டவளாய், வாயில் உள்ளங்கை பதித்து விநோதமான சங்கேத ஒலிக் குறி எழுப்பினாள்.

அதற்காகவே காத்திருந்தவர்கள் போல அவளைச் சேர்ந்த அனைவரும் அவரவர் புரவிகளில் பாய்ந்தேறிக் குவலை முன் சென்று வழி காட்டப் பின்பற்றிப் பறந்தனர். மின்னலென அவர்கள் மறையவும் "பிடியுங்கள்! பிடியுங்கள்!" என்று வீரர்களுக்கு உத்தரவிட்டான் திவாகரன்! (தொடரும்)

---

**கணவன்:** "என் அம்மாவை ஏன் சதா கரிச்சுக் கொட்டறே.. அவள் என்னைப் பெற்றதால் தான் உனக்கு நான் புருஷனாக முடிந்தது... அதை ஞாபகம் வச்சுக்க!"

**மனைவி:** "அது அடிக்கடி ஞாபகத்துக்கு வர்றதால்தானே சதா திட்டறேன் அவங்களை!"

-உ. ராஜாஜி



# யார் தமிழன்?

**வே**தாளம் கேட்டது: ''ஏ! விக்கிரமாதித்தனே, தமிழ் நாட்டின் தலையாய பிரச்னை இது! யார் தமிழன் என்று எப்படிக் கண்டுபிடிப்பாய்? பதில் சொல். இல்லாவிட்டால் உன் தலை சுக்குநூறாக வெடித்துவிடும்!''

விக்கிரமாதித்தனுக்குத் தலையே வெடித்து விடும்போல் இருந்தது. யோசித்தான். செய்தித் தாள்களில் முக்கியமானவர்கள் பேசிய பேச்சுக்கள் சட்டென நினைவுக்கு வரவே பதில் சொன்னான்:

''இதோ சொல்கிறேன் வேதாளமே கேட்டுக்கொள்! புறநானூறு 43வது பாடல், மற்றும் திருக்குறள் 96வது அதிகாரம் இவற்றின்படி எதிர்க் கட்சித் தலைவர் தமிழரல்ல என்று அமைச்சர் குழந்தைவேலு பேசியிருக்கிறார். இதே முறையை நாட்டிலுள்ள எல்லாருக்கும் பின்பற்றித் தமிழர்களைச் சுலபமாகக் கண்டுபிடித்து விடலாம். பழம் பாடல்கள் மூலம் தமிழனைக் கண்டுபிடிக்கும் முறை இது.

''இரண்டாவது வழி, தமிழச்சிக்குப் பிறந்தவன்தான் தமிழனாக இருக்க முடியும். எனவே தமிழச்சி யார் என்பதைக் கண்டு பிடிக்க வேண்டும். அது மிகவும் எளிது. பெண்கள் இருக்கும் பகுதிகளில் நைஸாகப் புலியைக் கொண்டு போய் விட்டு விடவேண்டும். எந்தப் பெண் அந்தக் கொடிய புலியை முறத்தால் அடித்து விரட்டுகிறாளோ அவளே தமிழச்சி! அவளுக்குப் பிறக்கும் குழந்தை நிச்சயமாகத் தமிழனாகத்தான் இருக்க வேண்டும்.

''தமிழ்ப் பாரம்பரியத்தைக் காப்பதில் தமிழனுக்கு எப்பொழுதுமே ஆர்வம் உண்டு. ஆகவே சட்ட சபைக்குப் போனால் தமிழனைக் கண்டுபிடிப்பது சுலபம். அங்கே நடக்கும் சண்டையில் புறமுதுகு காட்டி ஓடாமல் ''ஒண்டிக்கு ஒண்டி வர்றியா?'' என்று குரல் கொடுக்கும் வீரத் தமிழர்கள் தென்படுவார்கள். இது ஒரு சிறந்த வழி.

''ஆராய்ச்சி மனப்பான்மை அதிகம் இருப்பவன் தமிழனாகத்தான் இருக்க வேண்டும். ''ஏன் இங்கே சிலையை வைக்கக் கூடாது? சாலையின் பெயரை மாற்றினால் என்ன? மாயவரம் என்கிற பெயரை மயிலாடு துறை ஆக்க வேண்டும்'' என்றெல்லாம் பலவாறாக ஆராய்ந்து அதன் மூலம் ஏழைகளின் துயர் நீக்குவார்கள். ''எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் இனம்'' என்று பாடிய கையோடு ''நீ தெலுங்கன், நீ கன்னடம்'' என்று ஆவேசமாகப் பேச ஆரம்பித்துவிடுவார்கள். நகைச்சுவை உணர்வு நிரம்பியவன் தமிழன்தான் என்பது இதிலிருந்து தெரியவில்லையா? இப்போது சொல் வேதாளமே! தமிழனைக் கண்டுபிடிப்பது கடினமா?''

விக்கிரமாதித்தன் தமிழ் நாட்டு அரசியல் நடப்புக்களை உன்னிப்பாகக் கவனித்து வந்திருக்கிறான் என்பதை அறியாமல் அவனிடம் கேள்விகேட்டு மாட்டிக்கொண்டோமேஎன்று வருந்தியபடி ''யார் தடுத்தாலும் உண்ணாவிரதம்'' என்னும் (ஸ்டண்ட்) கதையைச் சொல்ல ஆரம்பித்தது வேதாளம்.

—628—



# அல்ஸருக்கு ஆபரேஷன்




''டாக்டர் டியோடினல் அல்ஸர் என்றால் என்ன?''

''டியோடினம் என்பது சிறுகுடலின் ஆரம்ப கட்டம். இரைப் பையை அடுத்துள்ள பகுதி. இங்கு புண் ஏற்பட்டால் அதனை டியோடினல் அல்ஸர் என்கிறோம்.''

''இங்கு ஏன் பலருக்குப் புண் வருகிறது?''

''இரைப் பையில் ஹைட்ரோ குளோரிக் அமிலம் உற்பத்தியாகிறது. இது அளவுக்கு அதிகமானால் அல்ஸர்—டியோடினல் அல்ஸர்—வரும். மூளையிலிருந்து இறங்கி வரும் வேகஸ் என்ற நரம்பு இந்த அமிலம் சுரப்பதைக் கட்டுப்படுத்துவதோடு மட்டுமின்றி சிறுகுடல் கல்லீரல், பான்கிரியாஸ் போன்ற உறுப்புக்களிலும் திரவங்கள் சுரக்கவும் குடல்களின் அசைவுக்கும் காரணமாகிறது. அதிகமான கோபம், கவலை போன்ற உணர்ச்சிகள் வேகஸ் நரம்பைப் பாதித்து அதிக அமிலம் வயிற்றில் உற்பத்தியாகச் செய்கிறது. நிதான புத்தியுடன் சாந்தமாக இருப்பவர்களுக்கு அல்ஸர் அநேகமாய் வருவதில்லை. ஆனால் கண்ட கண்ட நேரத்தில் கண்டதைத் தின்பது, டீ காப்பி முதலியன அளவுக்கு அதிகமாய்க் குடிப்பது, அடிக்கடி பட்டினி கிடப்பது, சிகரெட், மது முதலியவற்றாலும் அல்ஸர் வரும்.''

''அல்ஸர் வந்தால் ஆபரேஷன் தானா?''

''இல்லை, இல்லை.. வியாதிக்கான அறிகுறிகளைக் கண்டதுமே டாக்டரிடம் போனால் ஆபரேஷன் இன்றியே குணப்படுத்த முயலலாம். பசிக்கும்போது எரிச்சல் ஏற்படும். சாப்பிட்டதும் நின்றுவிடும். இரவில் இரைப் பை காலியானதும் எரிச்சல் உண்டாகும். இவை அறிகுறிகள். டாக்டர் இதற்கு ஆல்கலி உள்ள மருந்தைக் கொடுத்து அமிலத்தைச் சமன் செய்வார். ஆகார நியமங்களாலும், ஓய்வு, அமைதியாலும் புண் ஆற வழியுண்டு. நோய் முற்றினால் ஆபரேஷன்தான்.''

''ஆபரேஷனின்போது சிறுகுடலில் புண் உள்ள இடத்தை வெட்டி எடுத்து விடுவார்களா?''

''முற்றிய நிலையில் புண் இருந்தால் அவ்வாறு செய்வதும் உண்டு. அந்தப் பகுதியை நீக்கிவிட்டு இரு முனைகளையும் சேர்த்துத் தைப்பார்கள். இன்னொரு சிகிச்சை முறையில் வேகஸ் நரம்பை வெட்டுவதன் மூலம் அதிகம் அமிலம் சுரப்பதைக் கட்டுப்படுத்தி டியோடினல் அல்ஸருக்கு நிவாரணம் அளிக்கிறார்கள்.''

''அது எப்படி டாக்டர்? சற்று விளக்கமாய்க் கூறுங்களேன்.''

''ஓ யெஸ்! இதோ இந்தப் படத்தைப் பாருங்கள். பட விளக்கங்களையும் படித்துக் கொள்ளுங்கள். இரைப் பையில் அமிலம் சுரக்கும் பகுதியும் உண்டு; மிக்ஸி பகுதியும் இருக்கிறது. மிக்ஸி பகுதி உணவை வயிற்றில் ஊறும் திரவங்களுடன் நன்கு கலக்கிக் கூழாக்கும். வேகஸ் நரம்புதான் சுரப்புக்களை மட்டுமின்றி, வயிறு, குடல் ஆகியவற்றின் இயக்கங்களையும் நிர்வகிக்கிறது. கீழிறங்கி வரும் இந்த வேகஸ்

# சுற்றுலாப் பக்கங்கள்

-சித்தி-

நரம்பைத் தண்டுப் பகுதியில் A என்ற இடத்தில் வெட்டினுல் அதனை Truncal Vagotomy என்பார்கள். இதனுல் இரைப் பையில் அமிலம் சுரப்பது கட்டுப்படுத்தப்படலாம்; ஆனுல் அதே நேரத்தில் கல்லீரல், சிறுகுடல் ஆகியவற்றின் சுரப்புக்களும் இயக்கங்களும் பாதிக்கப்படும். பேதி ஆவது, கொழுப்புச் சத்து ஜீரணிக்காமல் தொல்லை தருவது போன்ற வேண்டாத விளைவுகள் ஏற்படும். எனவே இந்த இடத்தை விட்டு விட்டுக் கீழிறங்கி வந்து B என்ற இடத்தில் வெட்டினுல் இரைப் பைக்குப் போகும் நரம்பு மட்டும் வெட்டப்படுகிறது. அபரிமிதமாக அமிலம் சுரப்பது நிற்கிறது. இதை Selective Vagotomy என்பர். இந்த முறையிலும் ஒரு சங்கடம். இரைப் பையின் மிக்கிப் பகுதி தன் பணியை ஆற்ற முடியாமல் பாதிக்கப்படலாம். எனவே மேலும் கீழிறங்கி வந்து C என்ற இடத்தில் வெட்டலாம். இதனை Ultra selective Vagotomy என்பர். இந்த முறையில் இரைப் பையில் அமிலம் சுரப்பது மட்டுமே நிறுத்தப்படுகிறது. மிக்கி பகுதி தன் இயக்கத்தை இழக்காது. அந்தந்த நோயாளியின் தேவைக்கு ஏற்ப எந்த ஆபரேஷனைச் செய்வது என்று டாக்டர் முடிவு செய்வார்.''



''ஆபரேஷனுக்கு முன்பே புண் எங்கே இருக்கிறது என்று எப்படிக் கண்டுபிடிக்கிறீர்கள் டாக்டர்?''

''பேரியம் மீல் என்று ஒரு மாவை உண்ணச் செய்து எக்ஸ்ரே எடுத்தால் அது புண் உள்ள இடத்தைச் சுட்டிக் காட்டி விடும். காஸ்ட்ரோ டியோடினுஸ்கோப் என்ற நவீனக் கருவி குழாய் மாதிரி இருக்கும். இதை இரைப் பை வழியாக டியோடினத்துக்குள் செலுத்தி அதன் மூலம் அல்சரை நேருக்கு நேர் பார்ப்பது போல் காணலாம்!''

''ரொம்ப தாங்க்ஸ் டாக்டர்.''

பொறுமையாக விளக்கிச் சொன்ன டாக்டர் சுந்தரராமன், தமது ஜெனரல் ஸர்ஜரி கிளினிக்கில்Selective Vagotomy ஆபரேஷன் செய்யும்போது வண்ணப் படம் எடுத்துக் கொள்ள உத்ராவை அனுமதித்தார். ஆனுல் அதற்கு முன் உத்ராவும் நானும் எங்களை ஆபரேஷன் அறைக்கு ஏற்றவாறு தூய்மைப் படுத்திக் கொள்ள வேண்டியிருந்தது. பிறகு டாக்டர்களைப் போலவே நாங்களும் கிருமிகள் அற்ற அங்கிகளையும் முக மூடிகளையும் அணிந்து ஆபரேஷன் தியேட்டருக்குள் நுழைந்தோம். டாக்டர் சுந்தரராமனின் மகன், மகள் இருவரும் டாக்டர்களே. அப்பாவுக்கு உதவினுர்கள். ஆபரேஷன் வெற்றிகரமாக முடிந்தது. உத்ராவின் வண்ணப் படமும்தான்! ''படம் பிடிக்கும்போது ஏற்பட்ட அனுபவங்களில் இதுதான் ரொம்ப த்ரில்லிங்'' என்கிறுர் **உத்ரா**.




● 'புற்று நோயை முற்ற விடாதீர்கள்' என்ற டாக்டர் சாந்தாவின் பேட்டிக் கட்டுரையில் நான் ஆங்கிலப் பத்திரிகை ஒன்றுக்கு எழுதிய கடிதத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தீர்கள். திறமையான டாக்டர்களே எப்படி ஒரு சரியான முடிவுக்கு வராமல் நோயாளிகளை அலைக்கழிக்கிறார்கள் என்பதையே என் கடிதத்தில் தெரிவித்திருந்தேன்.

மேலும், யூடரஸ் புற்று நோயும் லுக்கேமியாவும் எப்படி ஒன்றாக முடியும் என்று கேட்கிறார் டாக்டர் சாந்தா. பம்பாய் டாடா மெமோரியல் மருத்துவமனையில் உள்ள கான்ஸர் நோய் சிகிச்சை நிபுணரான டாக்டர் ஜெஸாவாலா, தாம் எழுதிய 'கான்ஸருக்குப் பின் மறு வாழ்வு உண்டா?' என்ற பிரசுரத்தில் ''30 வயதுப் பெண்களுக்கு வரும் யூடரஸ் கான்ஸர் முன்னதாகவே கண்டுபிடிக்கப்படாவிட்டால் அது பிளட் கான்ஸராக மாறுவதற்குச் சாத்தியக் கூறுகள் அதிகம் உண்டு'' என்று கூறியுள்ளார்.

பெங்களூர் என்.எஸ். ராதாகிருஷ்ணன்

● இண்டர்வியூ செல்லும் இளைஞர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று விளக்கிக்கூறியுள்ள தென் மண்டல ரெக்ரூட்மெண்ட் பாங்கின் தலைவருக்கும் வெளியிட்ட உங்களுக்கும் இளைஞர்கள் சார்பில் எனது நன்றியைக் கூறிக் கொள்கிறேன்.

தஞ்சாவூர் பி. கே. தேவதாஸ்

● நானும் என் பொஞ்சாதியும் (20-6-82) இந்த வாரம் தாளிப்பு (கடுகு)ப் பக்கத்தைப் படிச்சிப்போட்டு சிரியோ சிரின்னு சிரிச்சோம். சார்! கடைசிப் பக்கத்தை நிப்பாட்டிப்புடாதீங்க. படா தமாஸா கீது சார்!

பெரம்பூர் அபிராமிதாசன்

● ரேஷன் கவிதைகள் பார்த்தேன். 'க்யூ'வில் நிற்கும் அசதியினைப் போக்கிவிடுகிற 'சக்தி' இருக்கு சார்!

சென்னை-4 மயிலை கோபி

● 'கனவுக்குள் கனவு' என்ற தலைப்புக்கேற்பமிக அருமையான வண்ணப் படத்தைத் தந்த சரஸ்வதி சத்தியமூர்த்திக்குச் சிறந்த புகைப்பட நிபுணர் என்ற பட்டத்தை அளிக்கும் படி கேட்டுக் கொள்கிறேன்.

சிதம்பரம் மா. வடிவேல்

● 'இவர்கள் ஜனாதிபதியானால்' என்ற தலைப்பில் உமாபதியின் கற்பனை சிம்ப்ளி சூபர்ப்! அதுவும் சுஜாதாவின் ரப்பர் ஸ்டாம்ப் மெஷின் கண்டுபிடிப்புக்கு நமது பிரதமர் அளவிலா ஆனந்தப் பரவசம் அடைவது... ரொம்பவும் ரசித்தேன்.

போடிநாயக்கனூர் எஸ். சையது முகமது

● தாங்கள் ஸ்டேட் பாங்க் பக்கமோ அல்லது வேறெந்த தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகள் பக்கமோ போனதுண்டா? அங்கு நூற்றுக்கு எண்பது பேருக்கு மேல் பிராமணர்களாகவே இருப்பதைப் பார்த்ததுண்டா? டி.வி.எஸ்., சுசன் குரூப், ராமன் அண்ட் ராமன் போன்ற தொழில் நிறுவனங்களின் பக்கம் போய்ப் பாருங்கள். BHEL, BEL, HAL, போன்ற அரசுத்துறை நிறுவனங்கள் பக்கம் போய்ப் பாருங்கள்.. அவ்வளவு பிராமணனும் தகுதி அடிப்படையிலா வேலைக்குச் சேர்ந்தார்கள்?

நீங்கள் இக்கடிதத்தைப் பிரசுரிக்காமல் உங்கள் குப்பைத் தொட்டியில் போடப் போகிறீர்கள் பாருங்கள் அதுதான் பிராமணீயத்தின் பிரதிபலிப்பு!

சென்னை-17 எம். பாலசுப்பிரமணியன்

[நேயர் குறிப்பிடும் இடங்களில் பிராமணர்கள் இருக்கலாம் ஆனால் பார்ப்பனீயம் இல்லை என்பதே கட்டுரையில் சொல்லப்பட்டிருப்பது. நல்ல வேலை வாய்ப்பைப் பெற்றவர்களும் ஒரு வேளை சோற்றுக்குக் கூட நாதி இன்றி அவதிப் படுபவர்களும் எல்லா ஜாதியினரிலும் உண்டு. பிராமணர்களும் விதிவிலக்கு அல்ல. -ஆர்]

● நீங்கள் பார்ப்பனீயத்தைத் தேடி இவ்வளவு தூரம் அலைந்திருக்க வேண்டாம். ''எஞ்சாமி ரேஸ்லே வுட்டுட்டீங்களா; கவலைப்படாதே. ஏறிக் குந்து சாமி''

இந்த ரிக்ஷாக்காரர் பயன்படுத்தியிருக்கும் ''சாமி'' என்ற சொல்லில்தான் அடங்கியிருக்கிறது பார்ப்பனீயம்.

இத்தகைய பார்ப்பனீயத்தை யார் எங்கு கொண்டு போய்த் தொலைப்பது? அது சரி, திராவிட இயக்கத் தலைவர் பெயர் செய்திகளில் அடிபட்டுக் கொண்டிருக்க வேண்டுமென்றால் பார்ப்பனீயம் தொலையக்கூடாதே!

சென்னை-33 டி.எஸ். வீரராகவன்

● ஆப்கானிஸ்தான் பற்றிய 20-6-82 கல்கியில் வெளியான தலையங்கம் ஒருதலைப்பட்சமாக உள்ளது.

ரஷ்யா ஏதோ தன்னுடைய படைகளை ஏவிவிட்டது என்று குற்றம் சாட்டுகிறீர்! ஆனால் ஜனநாயகக் காவலன் என்று தன்னைக் கூறிக்கொள்ளும் அமெரிக்கா எத்தனை நாடுகளில் தன்னுடைய படையை வைத்துள்ளது என்ற உண்மையை அறிய (அல்லது அறிவிக்க) மறந்தது எதனால்? அதுதான் போகட்டும். ஜனநாயக நாடான இந்தியாவுக்கு எதிராக பாகிஸ்தானுக்குப் பயங்கர ஆயுத உதவி அளிப்பது எதனால்?

பம்பாய் மணி

[அமெரிக்காவின் கண்டனத்துக்குரிய செயல்களை கல்கி கண்டிக்க என்றுமே தயங்கியதில்லை. அமெரிக்கா பல தவறுகளைச் செய்திருப்பதால் ருஷ்யாவின் ஆப்கன் ஆக்கிரமிப்பு நியாயமாகி விடாது. -ஆர்]



# புதிய ஜனாதிபதி எப்படிப்பட்டவர்?

**சென்ற வாரம் 'ஜெயில்சிங்குக்கு ஜே' என்ற தலைப்பில் ஒரு கிண்டல் கட்டுரை படித்தீர்கள். எந்த நாணயத்துக்கும் மறு பக்கம் உண்டு :**

ஜெயில் சிங் வெற்றி பெறுவார் என்பது தீர்ந்துபோன விஷயம். கன்னாவின் எதிர்ப்பு ஒரு ஜனநாயகச் சின்னமே.

ராஷ்டிரபதி பவனுக்குக் குடிவரப் போகும் அடுத்த ஜனாதிபதி எப்படிப்பட்டவர்?

அவரைப் பற்றிப் பலருக்கு அதிகம் தெரியவராததே அவரது அடக்கத்துக்கு ஓர் எடுத்துக்காட்டு!

நீண்ட காலமாகப் பொது வாழ்வில் ஈடுபட்டிருப்பவர். முதலில் சுதந்திரப்போராட்ட வீரர்; தடியடிபட்டுச் சிறை சென்றவர்; பின்னர் சமூக சீர்திருத்தவாதி; தாழ்த்தப்பட்டவர்களுக்காக வாதிட்டவர்; மாநில காங்கிரஸ் தலைவர்; வெற்றிகரமாக ஆட்சி நடத்திய அமைச்சர், முதல்வர். மத்திய அமைச்சரவையில் உள்துறை அமைச்சர்.

ஜெயில் சிங்குக்கு ஆங்கிலத்தில் ஆழ்ந்த ஞானம் கிடையாது. ஆனால் அது ராஷ்டிரபதி பவனில் பெரிய குறையாகத் தோன்றாது. ஏனெனில் அங்கு வருகிற அயல் நாட்டுப் பிரமுகர்களில் பாதிப் பேருக்கு மேல் இவ்விஷயத்தில் ஜெயில் சிங்கைப் போலவே தான். மொழிபெயர்ப்பாளர்களைப் பயன்படுத்துவது சர்வ சகஜமாகி விட்டது.

பஞ்சாபியிலும் உருதுவிலும் ஜெயில் சிங் புலமை மிக்கவர். சக்தி வாய்ந்த விதத்தில் நாடாளு மன்றத்திலும் பொதுக் கூட்டங்களிலும் பேசும் திறன் படைத்தவர். ரொம்பவும் தூண்டி விடப்பட்டால் கூட சட்டென்று உணர்ச்சி வசப்பட்டு விடாதவர். இந்தக் குண நலன்கள் கட்சி சார்பற்று ஜனாதிபதி கடமையாற்ற உதவும்.

எந்த ஒரு விழாவானாலும் அதற்கேற்ப ஒரு உருதுக் கவிதை கூறிவிடுவார். அனாயாசமாக அவர் இதைக் கூறும்போது அவர்மேல் கோபப்பட்டவர்கள் கூடத் தணிந்துபோய் விடுவார்கள்.

இவரது நேர்மை என்றைக்குமே சந்தேகத்துக்குள்ளானதல்ல. பணம் சேர்த்துவிட்டார் லஞ்சம் வாங்கிவிட்டார் என்று யாரும் இவரைச் சுட்டிக் காட்டியது கிடையாது. தமது உறவினர்களுக்காகச் சலுகை காட்டியதில்லை. அவர் மகன் ஒரு தொழிலதிபராகவோ வர்த்தகராகவோ வளம்பெறவில்லை. இவர் குடும்பத்தைச் சேர்ந்தவர் யாரும் தங்கள் செல்வாக்கைப் பிரயோகம் செய்ய முயன்றதில்லை.

ஜெயில் சிங் ஜனாதிபதியாவதை மற்றுமொரு காரணத்துக்காகவும் வரவேற்க வேண்டும்.

சீக்கிய குலத்தைச் சேர்ந்த பலருக்கு எப்படியோ தங்களுக்கு நியாயம் கிட்டவில்லை என்ற எண்ணம் ஏற்பட்டுள்ளது. இந்த அதிருப்தியை விரும்பத் தகாத பல அரசியல் சக்திகள் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்தி வருகின்றன. ஜெயில் சிங்குக்கு நம் நாட்டிலேயே மிக உயர்ந்த பதவியை அளித்துக் கௌரவிப்பதன் மூலம் சீக்கியரின் மனக்குறைகள் பெருமளவுக்கு நீங்கும்.

**நன்றி: ஹிந்துஸ்தான் டைம்ஸ் தலையங்கம்**

**மேலட்டை வண்ணப்படம்: மணியம் செல்வன்**

மகன்: "அம்மாவும் பாட்டியும் மொட்டை மாடியில் ஆளுக்கொரு பக்கமாகத் தவம் செய்யறாங்க!"

அப்பா: "எதுக்குடா?"

மகன்: "பாட்டி தவம் செய்வது வடகம் காய வெயில் வேண்டி! அம்மா தவம் செய்வது ஸோலார் குக்கரில் சமைக்க வெயில் வேண்டி!"

-உ. ராஜாஜி





✖ ஜெயில்சிங் ✖ அந்துலே

✖ கவாஸ்கர் ✖ வி.பி. சிங்





# நீங்கள் கேட்டவை

✖ பாரதி அன்பெழிலன், புதுச்சேரி
? நமது நாடு உடனடியாக உருப்பட ஒரு யோசனை சொல்லுங்கள் பார்க்கலாம்?
! தமது ஆற்றலின்மையை உணர்ந்து பதவி துறந்த உ.பி. முதலமைச்சர் வி.பி. சிங் இன் முன்னுதாரணத்தை எல்லாத் தலைவர்களும் பின்பற்றட்டும்!

✖ எம். நாகேந்திரகுமார், ஓசூர்
? உங்களால் மாற்ற முடியாத பழக்கம் எது?
! என்னால் மட்டுமென்ன, உயர் உயர் போலீஸ் அதிகாரிகளாலேயே மாற்ற முடியாத கொடிய பழக்கம், மீட்டரை மதிக்காது ஆட்டோ டாக்ஸி ஓட்டிகள் பேரம் பேசுவது. ரயில் நிலையத்திலாவது நம்மவர் நம் தலையெழுத்து என்று எண்ணி ஏறிக் கொள்கிறார்கள். விமான நிலையத்தில் அயல்நாட்டுப் பயணிகள் அல்லல் படுவதைப் பார்த்தால் கண்ணீர் வருகிறது. திரும்பச் சென்று நம் தமிழகத்தைப் பற்றி தங்கள் நண்பர்களிடம் என்ன கூறுவார்கள் என்றெண்ணும்போது மனம் பதைக்கிறது!

✖ எல்லார்வி. பட்டினப்பாக்கம்
? கவாஸ்கர், விஸ்வநாத் ஒப்பிடுக.
! டீ. வி. காமிராவுக்கான ஆர்க் லாம்ப்—கவாஸ்கர். தெருக்களுக்கான ஸோடியம் வேப்பர் லாம்ப்—விசுவநாத்.

✖ எஸ். முல்லைமணாளன், தென்காசி
? பராசக்தி என்ற பெயருக்குப் பின் இருப்பவர் கலைஞர்தான் என்று கல்வி படம் போட்டுக் காட்டியது சரியா?
! தப்பாகவே இருந்தாலும் அந்தப் பராசக்திக்குப் பின் இருக்கும் பராசக்தி கலைஞர்தான்!

✖ இ. உமாபதிராசா, புதுச்சேரி
? சிலுக்கும் ஜெயமாலினியும் சென்ஸார் போர்டு உறுப்பினரானால்?
! உருப்படியான யோசனை! திரைப்படத் துறையினர் சிலரும் சென்ஸார் போர்டில் இடம்பெற வேண்டியது அவசியம்தான், அப்போதுதான் அவர்களுக்குப் பொறுப்புணர்ச்சி அதிகரிக்கும்.

✖ ஏ. புருஷோத்தமன், புதுவை
? இந்தியா விடுதலைக்குப்பின் பல்வேறு துறைகளில் அரிய சாதனைகள் புரிந்திருந்தும் அது மக்களைக் கவரவில்லையே ஏன்?
! சாதனைகள் மக்களை எட்டாததால் கவரவில்லை. மக்களின் அன்றாடப் பிரச்னைகளுக்குத் தீர்வு காணக் கூடிய விதமாகச் சாதனைகள் அமையவில்லை. வேலை வாய்ப்புக்களைப் பெருக்கும் திட்டங்களைத் தீட்டியிருந்தால் சாதனைகள் மக்களைக் கவர்ந்திருக்கும். மாறாகப் பிச்சைக்கார மனப்பான்மையை வளர்க்கும் திட்டங்களையே அடுத்தடுத்து அமல்படுத்துகிறார்கள்!

✖ ஆர். இளங்கோ, ஏந்தல்
? அந்துலே ஊழல் விவகாரம் முடிந்த கதைதானா?
! முடிந்த கதையாகுமாறு விட்டு விட்டால் நாட்டு மக்கள் எல்லோருக்கும் அவமானம். ஏமாந்த சோணகிரிகள் ஆவோம். அவர் மீது வழக்குத் தொடரப்பட்டு அவர் தண்டனை பெற்றாக வேண்டும்.

✖ ப. மூர்த்தி, பங்களூர்
? இன்றைய அதிசயம் என்ன? அவசியம் என்ன? அவசரம் என்ன?




! மாணவர்களைப் பகைத்துக் கொள்ளத் துணிந்த பல்லவன் பஸ் டோக்கன் விலைகளை ஏகத்தாறுக உயர்த்தியது அதிசயம். ஆல ரூட் டோக்கன் வழங்கச் சம்மதிப்பது அவசியம். மாணவர் போராட்டம் எல்லை மீறுமுன் பல்லவன் கௌரவமாக விட்டுக் கொடுப்பது அவசரம்.

✠ பூவை கே. சந்திரன், பாண்டமங்கலம்
? நீங்கள் சமீபத்தில் கேட்டு ரசித்த அரசியல் ஜோக்?
! ''நாளை நான் பாங்காக் போகிறேன்'' என்ற ஜெயில் சிங். பத்திரிகை நிருபர்கள் திகைத்தனர். ''ஜனாதிபதி தேர்தல் தீவிரமடையும் இந்த நேரத்திலா?'' ''காங்டாக்'' என்று மன்னிப்புக்கோரும் பாவனையில் கெகிகத்தார் உடனிருந்தகாரியதரிசி.

✠ ஏ. எம். பழனிச்சாமி, அரியநாச்சிபாளையம்
? காந்தி, நேரு இவர்களில் ஒருவரை உயிரோடு அழைத்துக் கொள்ளும் ஆற்றலை பெறுவீர்களானல் யாரை வரவழைப்பீர்கள்? காரணம்?
! ''ஐயோ பாவம்! அவர்கள் நிம்மதியாக இருந்துவிட்டுப் போகட்டும்.'' என்று என் ஆற்றலைப் பிரயோகிக்காமல் இருந்துவிடுவேன்.

✠ எஸ். பி. குணசேகரன், வடகாடு
? நாமிருக்கும் நிலைமையில் ஆசிய விளையாட்டுப் போட்டி அவசியம்தானு?
! விளையாட்டுப் போட்டி அவசியம்தான். ஆனல் அதற்கு ஆயிரம் கோடி செலவு அவசியமில்லை. இந்தச் செலவில் எத்தனை சதவீதம் நமது விளையாட்டு வீரரின் ஆற்றலை வளர்க்கச் செலவாகிறது என்று கணக்கிட்டால்... வெட்கம்! வெட்கம்!

✠ ச. புகழேந்தி, திருவையாறு
? இன்றைய உலகில் உங்களை வியக்க வைப்பது எது?
! இத்தனை குடிசைத் தீவிபத்துக்கள் நேர்ந்த பிறகும் ஓலைக் கூரைக்குப் பதில் ஆஸ்பெஸ்டாஸ் கூரை போட்டுக்கொள்ள ஏழைகளுக்கு ஒடு விநியோகிக்க அரசு முன் வராதது. குடிசை மாற்று வாரியம் அடுக்கு மாடிக் கட்டிடங்களை எழுப்புவது போல் அதிகமாகப் பணம் செலவாகாத இந்த விஷயத்தில் அதிகமாகக் கவனம் செலுத்தலாம்.

✠ சுஜாதா, புதுவை
? கல்கி பத்திரிகையின் தனிப்பட்ட கொள்கை என்ன?
! ''இந்தத் தமிழர் பத்திரிகையின் நோக்கங்கள் என்ன? புதிதாகப் பத்திரிகை ஆரம்பிப்பவர்கள் எல்லாரும் சொல்வது சம்பிரதாயமாயிற்றே'' என்ருர் விநாயகர். ''நானும் சொல்கிறேன் சுவாமி இந்தப் பத்திரிகைக்கு மூன்று நோக்கங்கள் உண்டு. முதலாவது நோக்கம் தேச நன்மை...''
''இரண்டாவது?''
''இரண்டாவது தேச நன்மை.''
''மூன்ருவது?''
''மூன்ருவதும் தேச நன்மைதான்!''
(ஆகஸ்டு 1, 1941 முதல் இதழில் அமரர் கல்கி எழுதிய உபயகுசலோபரியில் ஒரு பகுதி.)

✠ கல்கத்தா மிக்கி, கல்கத்தா
? ஆகாஷ்வாணியை ஆல் இந்தியா ரேடியோவாக மீண்டும் மாற்றியதால் யாருக்கு அதிக லாபம்?
! சந்தேகமில்லாமல் இந்திரா காந்திக்குத்தான். ஹிந்தி பேசாத மாநில மக்களின் உணர்வுகளைத் தாம் ரொம்பவும் புரிந்து கொண்டு மதிப்பதாக நாடகமாட உதவியிருக்கிறது.

✠ ச.ரா.கோ. திருப்பூர்
? பம்பாயில் நடந்துள்ள விமான விபத்து பற்றி..?
! விபத்து நடப்பதும் உயிரிழந்தவர்களுக்கு அநுதாபமும் நஷ்ட ஈடும், விசாரணைக் கமிஷனும் அதன் அறிக்கையும், அதை அலட்சியம் செய்துவிட்டுத் தொடர்ந்து விமான நிலையத்தையும் விமானங்களையும் ஆபத்தை வரவேற்கும் நிலையிலேயே வைத்திருப்பதும் நமக்குப் பழகிப்போன விஷயங்கள்தாமே.

✠ ஆர். ஸ்ரீனிவாசன், ஸ்ரீரங்கம்
? முடிந்தவர்கள் எழுதுகிருர்கள், முடியாதவர்கள் விமர்சிக்கிருர்கள் — உங்கள் கருத்து?
! இதுவல்ல. எழுத முடிந்தவர்கள்தான் எழுத்தை விமரிசிக்க வேண்டுமென்ருல், நடிக்க முடிந்தவர்கள்தான் நடிப்பை விமர்சிக்க வேண்டும். பாட முடிந்தவர்கள் தான் பாட்டை விமர்சிக்க வேண்டும் என்று வளரும். விமர்சனம் நியாய உணர்வோடு அமைய வேண்டும் என்பதே முக்கியம்.

ரூ. 10/- பரிசு பெறுபவர் :

எம். நாகேந்திரகுமார்

2, கிருஷ்ணகிரி சாலை, ஒசூர்-635 109

# புதுக்கணக்கு

இன்று புதுக் கணக்கு என்ற பெயரில் புதிய கணித முறை வந்திருக்கிறது. என்னைக் கேட்டால் கணித முறையில் மேலும் சீர்திருத்தம் செய்ய நிறைய இடம் இருக்கிறது என்பேன். யதார்த்தமாக அமைக்கவும் வேண்டும். மாணவர்கள், உலகின் உண்மை நிலைகளை உணர முடியாதபடி கணக்குகளை அமைக்கவோ, விடைகளைக் கண்டு பிடிக்க முயலவோ கூடாது. சில உதாரணங்களைப் பார்ப்போம்.

• • •

''நாலு பேர் ஒரு வேலையை முடிக்க இருபது நாட்கள் ஆகும் என்றால், 16 பேர் அந்த வேலையை முடிக்க எத்தனை நாட்கள் ஆகும்?'' — இது ஒரு கணக்கு.

இதற்குச் சரியான விடை 5 நாட்கள் என்று ஆசிரியர் சொல்லுவார். தவறு என்கிறேன் நான். 16 பேர் அந்த வேலையைச் செய்ய ஆரம்பித்தால் என்ன ஆகும்? முதலில் யூனியன் தொடங்குவார்கள். யூனிபாரம், போனஸ், ஊக்க போனஸ், வீட்டு வசதி, மருத்துவ வசதி என்று கேட்பார்கள். இரண்டாவது நாளிலிருந்து வேலை நிறுத்தம் செய்வார்கள். ஒரு வாரம் வரை முதலாளி தாக்குப்பிடித்து விட்டு, கடைசியில் இறங்கி வருவார். அதன் பிறகு வேலை மறுபடியும் துவங்கும். லீவு வசதி சலுகை இருப்பதால் நாலு பேர் மூன்று நாள் லீவில் போவார்கள். லேட்டாக வேலைக்கு வரும் பிறப்புரிமையும் கிடைத்துவிடும். இதன் காரணமாக வேலை ஆமை வேகத்தில் நடந்து 37 நாட்களில் முடியும். இதுதான் உண்மையான (சரியான) விடையாக இருக்க, ஆசிரியர் 5 நாட்கள் என்று சொல்லித் தருவது அபத்தமல்லவா?



• • •

''ஒரு பொருளை நூறு ரூபாய்க்கு வாங்கியவன் பத்து சதவிகிதம் நிகர லாபம் பெறுவதற்கு என்ன விலையில் அதை விற்க வேண்டும்?'' என்ற கணக்குக்கு இந்த ஆசிரியர்கள் 110 ரூபாய் என்று சொல்லித் தருவார்கள்.

அவன் 110 ரூபாய்க்கு விற்றால் சேல்ஸ் டாக்ஸ் இன்ஸ்பெக்டர், கார்ப்பரேஷன் சூபர்வைசர், ஹெல்த் ஆபீசர், பீட் கான்ஸ்டேபிள் இவர்களுக்கு எல்லாம் கொடுத்தது போக எண்பது ரூபாய் கூட நிற்காது. ஆக நிகர நஷ்டம் 20 ரூபாயாகும். அவனுக்குப் பத்து சதவிகிதம் லாபம் வரவேண்டுமானால் 140 ரூபாய்க்கு விற்க வேண்டும். இதுதான் சரியான விடை.

• • •

''ஒரு லேவாதேவிக்காரர் ஆயிரம் ரூபாயை 20 சதவிகித வட்டிக்குக் கடன் கொடுத்தால் மூன்று வருடத்துக்குப் பிறகு அவருக்கு எவ்வளவு பணம் கிடைக்கும்'' என்று ஒரு கணக்கு. இதற்கு விடையைக் கண்டு பிடிக்கக் கணக்குத் தெரியவே வேண்டாம். பணம் கடன் கொடுத்தால் வட்டியும் வராது, முதலும் வராது என்கிற யதார்த்த உண்மையை அல்லவா ஆசிரியர் போதிக்க வேண்டும்!

• • •

''இரண்டு புள்ளிகளுக்கு இடையே உள்ள மிகக் குறைவான தூரமுள்ள பாதை எது?'' என்று ஆசிரியர் மாணவனைக் கேட்கிறார்.

பையன் விழித்துவிட்டு 'அரை வட்டமாக வரும் பாதை' என்று சொல்கிறான்.

''தப்பு. அந்தப் புள்ளிகளை இணைக்கும் நேர்கோடுதான்... இந்தச் சின்ன கணக்குக்கு விடை தெரியாதவன் நீ. வாழ்க்கையில் எப்படிப் பொழைக்கப் போகிறாயோ!'' என்று அலுத்துக் கொள்கிறார்.

உண்மையில் மாணவன் பிற்காலத்தில் நன்றாகத்தான் பிழைக்கப் போகிறான்—அவனது அரை வட்டப் பாதை விடையைத் தன் தொழிலில் உபயோகித்து. ஆம், பின்னால் அவன் ஆட்டோ ரிக்ஷா ஓட்டப் போகிறான். சென்ட்ரலிலிருந்து எழும்பூருக்கு ராயபுரம் வழியாகப் போய் நிறையப் பணம் பண்ணி 'டாக்சி டிரைவராக' உயரப் போகிறான். ஆசிரியரோ அப்படியே 'தப்பு விடை'யைச் சொல்லிக் கொடுத்துக் கொண்டு அவதிப்பட்டுக் கொண்டு இருக்கப் போகிறார்!

• • •

இப்போது சொல்லுங்கள். புதுக் கணக்கிற்கும் சீர்திருத்தம் தேவையா இல்லையா என்று!

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)
Assistant Editor: P.S. Mani Layout Artist: Nambi Editor: K. Rajendran

# மின்னலடிக்கும் ஸூப்பர் ரின் வெண்மை...

## ...இதர, டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை.

பார்வைக்கு தப்பவே தப்பாத வெண்மை உங்கள் துணிகளுக்கு—வேளை தவறாத ஸூப்பர் ரின் சலவையின் வெண்மையே தனி.
இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சுவது ஸூப்பர் ரின் வெண்மை.
காரணம், மிகுந்த வெளுக்கும் சக்தி அடங்கியது ஸூப்பர் ரின்.

**நீங்களே கண்டுகொள்வீர்கள்**







அதிக வெளுப்பூட்டும் சக்தி படைத்தது ஸூப்பர் ரின்.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லிண்டாஸ்-RIN.35-2012 TM

